KALKI
16.3.2008 ரூ 8.00
80 பக்கங்கள்

# கல்கி

குடும்பத்துடன் படிக்க..







## குஜராத் டுடே

6 வார அதிரடி ரிப்போர்ட் ஆரம்பம்!



As per BIS,
IS:2888-1983



# உத்திரவாதமான மேனிப் பராமரிப்பு
# தலைமுறை தலைமுறையாக

50 ஆண்டுகளுக்கும் மேலாக மேனிப் பராமரிப்பில் ஸிந்தால் நம்பகமான சோப் என்று தொன்றுதொட்டு பெயர் பெற்றுள்ளது. ஸிந்தால் சோப் மேனியின் எழிலை மேம்படுத்துகிறது. இதன் ஒப்பற்ற நறுமணம் நாள் முழுவதும் நீடித்து உங்களை புத்துணர்வுடன் வைக்கும் எனவே ஸிந்தால் பல தலைமுறைகளாக விசுவாசமான வாடிக்கையாளர்களை உருவாக்கியதில் ஆச்சரியமில்லை.




**மேனிப் பராமரிப்பு என்றென்றும்**

The Company is proposing, subject to market conditions and other considerations, an offer on a rights basis of its equity shares and has filed a Draft Letter of Offer with SEBI, which is available on the website of SEBI at www.sebi.gov.in and LM at www.jmfinancial.in

# அறிமுகப்படுத்துகிறோம்

# புதிய வெள்ளி விற்பனைப் பிரிவு

தங்கத்தின் தரத்திலும், மக்களின் நம்பிக்கையையும் பெற்ற
"தி சென்னை சில்க்ஸ் ஜுவல்லரி மஹாலில்"
**வெள்ளி மற்றும் பரிசுப் பொருட்களுக்களுக்கான**
**பிரத்யேகமான மாபெரும் விற்பனை பிரிவு இனிதே துவக்கம்.**














- வெள்ளி நகைகள்
- பேன்சி வெள்ளி நகைகள்
- வெள்ளி நாணயங்கள்
- வெள்ளிக் கலைப் பொருட்கள்
- வெள்ளி பரிசுப் பொருட்கள்
- வெள்ளி பூஜைப் பொருட்கள்
- Titan கடிகாரங்கள்
- ரியல் ஸ்டோன்ஸ் மாலைகள்
- தஞ்சாவூர் தட்டுகள்
- தஞ்சாவூர் பெயிண்டிங்ஸ்

ரூ.50 முதல்

கொலுசு முதல் விலை மதிப்பற்ற
5 லட்சம் வரை

கலைப்பொருட்கள் வரை

வேறெங்கும்
காணமுடியாத
கண்கவர்
கலெக்‌ஷன்கள்




GOLD • SILVER • DIAMOND • PLATINUM
இந்தியாவின் தன்னிகரற்ற தங்கமாளிகை

தி.நகர், சென்னை - 17. Ph : 044-24330888

கார் பார்க்கிங் வசதி உண்டு • ஞாயிறு கடை உண்டு • Shop online at www.sktm.in

ஸ்ரீ தேனுகாம்பிகை படம் பூஜை அறையில் வைத்து பூஜிக்க வேண்டிய அற்புத படம்! சுதா சேஷய்யனின் தொடர் பக்தி சுவையூட்டியது.

**- இந்திரன், நாகர்கோவில்**

**பா**கிஸ்தானிலும் புதிய ஜனநாயகம் மலரவேண்டும் என்ற நல்லெண்ணத்தில் எழுதப்பட்ட தலையங்கம், 'கல்கி'யின் பரந்த மனப்பான்மையை காட்டுகிறது.

**- என்.பாலகிருஷ்ணன், மதுரை**

**உ**ண்மை உழைப்பாளியான தோட்டக்கார ஏகாம்பரத்தை நேருஜியிடம் அறிமுகப்படுத்தியது, சதாசிவத்தின் உயர்ந்த குணத்தைக் காட்டுகிறது.

**- ஆர்.ஹேமாம்புஜம், சென்னை - 17**

**இ**ந்திய பட்ஜெட்டில் தேர்தலை நோக்கி சில சலுகைகளை நிதி அமைச்சர் அறிவிக்கப்போவதைக் காட்டுகிற கார்ட்டூன் சூப்பர்!

**- இரா.சக்கரபாணி, மதுரை**

'**அ**ண்ணா தி.மு.க. அல்ல... அம்மா தி.மு.க' என்று சொல்லி, அம்மாவுக்கு ஐஸ் வைத்த எஸ்.வி.சேகர், சினிமாவைப் போல அரசியலிலும் தேறிவிட்டார்.

**- பி.சிவா, பாளையங்கோட்டை**

'**வா**ழ்க்கை பரீட்சை வைத்து பின் பாடம் கற்றுத் தருகிறது' கிரேஸியின் பதில் அருமை!

**- ஏ.பி.எஸ்.ரவீந்திரன், வள்ளியூர்**




# இலக்கியத்திலும் பினாமியா?

**ந**யம்பட எடுத்துரைப்பது நல்லவற்றுக்கு வித்திடுகிறது என்பதைப் பறை சாற்றியது 'அதிர்ச்சி வைத்தியம்' சிறுகதை.

**- எஸ்.உஷா, சென்னை - 44**

**இ**யற்கை விவசாயம் நன்மைக்கு வித்திடும் எனப் பிரசாரம் செய்து, செயல்பட்டு வரும் நம்மாழ்வாரின் முயற்சிகள் வெற்றி பெற வேண்டும்.

**- எம்.காயத்ரி, திருச்சி**

**கி**ரிக்கெட் சூதாட்டத்தில் ஈடுபட்ட அசாருதீன் போன்றவர்கள் மேயர் பதவி மட்டுமல்ல, மந்திரி ஆனாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.

**- செல்வராஜா, சேலம்**

'**கூ**டு திரும்புதல்' கதை, வேலை செய்யும்போதே டென்ஷனைக் குறைத்துக் கொண்டு சுற்றுச் சூழலையும் கவனிக்க வேண்டும் என்ற விழிப்புணர்வை

ஏற்படுத்தியது.

- எஸ்.மீனா, ஸ்ரீரங்கம்

இயக்குனர் சித்திக்கின் பேட்டி 'நச்சென்று' இருந்தது.

- ஆர்.கே.லிங்கேசன்,
மேலகிருஷ்ணன்புதூர்

இதென்ன புதுக் கூத்தா இருக்கு! பினாமி பாடலாசிரியர்களா? அய்யோ சாமி! இந்த மாதிரியான இலக்கிய பினாமிகள் வேண்டாமே!

- டேவிட் ராஜா, சென்னை - 114

கிராமப்புற மாணவர்களின் விளையாட்டுத் திறமையை வெளிக் கொணர முயற்சி எடுத்துள்ள 'நேஷனல் ஸ்போர்ட்ஸ் பவுண்டேஷ'னின் முயற்சி வெற்றி பெற வேண்டும்.

- சி.மகேஷ், திருச்சி -17

தமிழிலேயே செல்போன் சிற்றிதழ் நடத்த வேண்டும் என்ற எஸ்.எம்.எஸ். ராஜாவின் விருப்பம் விரைவில் நிறைவேற வாழ்த்துகள்.

- இ.முகம்மது உசேன்,
திருச்சி - 23

'ஜாலி ஸ்டோரீஸ்' பகுதியில் உள்ள விஷயங்கள் படிக்க சுவாரஸ்யமாக இருந்தாலும், நிறைய விஷயங்கள் உண்மையாக இருக்குமோ என்று எண்ணத்தோன்றுகிறது.

- ஆர்.பாலாஜி, சென்னை - 59




ஜெட் வேகத்தில் விலைவாசி உயர்கிற காலத்தில் கூட்ஸ் வேகத்தில் கட்டணக் குறைவா என ரொம்பவே சிந்திக்க வைத்துவிட்டது தலையங்கம்!

- சாமி, திருவண்ணாமலை

இந்த வார 'வாரம் ஒரு பாசுரம்' படித்த போது மனது பாரமாகியது; எழுதிய வரை இழந்து விட்டோமே என்று!"

- அனன்யா, திருச்சி




# கல்கி

பாரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பாரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர்:
லக்ஷ்மி நடராஜன்

கல்கி பில்டிங்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
சீதா ரவி

தலைமை உதவி ஆசிரியர் :
மு.மாறன்

வடிவமைப்பு :
எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன்,
ச.கார்த்திகேயன்

தொலைபேசி :
4343 8888, 2225 1522,
2225 0623, 2225 1324,

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com

சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com

பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு :
ஒரு வருடம் : ரூ. 440/-
ஆறு மாதம் : ரூ. 220/-

வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ்.டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

இதழில் வெளியாகும் விளம்பரங்களின் உண்மைத் தன்மைக்கு கல்கி நிர்வாகம் பொறுப்பல்ல.





# சில நேரங்களில்...

ஒரு கொலைக்குக் காரணமான உண்மையான குற்றவாளி யார் என்பதைக் கண்டுபிடிப்பதுதான் படத்தின் ஒரு வரிக் கதை. ஆனால், கொலை செய்யப்பட்ட கதாநாயகியும் (நவ்யா நாயர்), குற்றம் சாட்டப்பட்டு தூக்கிலிடப்பட்ட கதாநாயகனும் (வின்சென்ட் அசோகன்) மறு பிறவி (?) எடுத்து குற்றவாளியைக் கண்டு பிடிக்கிறார்கள் என்பதுதான் படத்தின் சுவாரஸ்யம். கேட்க சுவாரஸ்யமாக இருக்கற இந்தக் கதையை, முடிந்த வரை சுவாரஸ்யமின்றியே எடுத்திருக்கிறார்கள். தன்னைப் பற்றிய நினைவுகள் மறந்து போன நவ்யா நாயர், அடைக்கலமாக வின்சென்ட்டிடம் வருகிறார். அவ்வப்போது கதாநாயகியை வந்து துன்புறுத்துகிற நினைவுகளையும் அதற்கான காரணங்களையும் தெரிந்துகொள்ள வேண்டி, கதாநாயகியைப் பற்றிய விவரத்தை விளம்பரமாகக் கொடுக்கிறார். அதனைப் பார்த்துவிட்டு ட்ரீட்மெண்ட் கொடுப்பதாகச் சொல்லி, வருகிறார் ரகுவரன். இப்படிப் போகிறது கதை!

க்ளைமாக்ஸில் மட்டும் சின்ன 'ஷாக்' கொடுத்து முடிக்கிறார்கள். படத்தின் முதல் காட்சியிலும், கடைசிப் பத்து நிமிடங்களிலும் இருக்கற வேகம், மிச்ச நேரங்களில் மிஸ்ஸிங். கதாநாயகன் வின்சென்டுக்குச் சற்றும் பொருந்தாத வேடம். படத்தின் அத்தனை கதாபாத்திரங்களிடமும் ஒருவிதமான நாடகத்தன்மை தூக்கலாகவே இருக்கிறது. நிறையத் திருப்பங்கள் கொடுக்கக்கூடிய காட்சிகள் இருந்த போதும், அவற்றையெல்லாம் முன்பே ஊகிக்கக்கூடிய அளவுக்கு மகா ஓட்டையான திரைக்கதை. படத்தின் மிகப் பெரிய பலம் வேல்ராஜின் ஒளிப்பதிவு தான். மலையாளத் திரையுலகில் மிகப் பெரிய கலைஞனாகக் கொண்டாடப்படுகிற ஜெயராஜுக்குக் கதையைத் தேர்வு செய்ததில் இருக்கற அனுபவமும் முதிர்ச்சியும், காட்சிப்படுத்துதலில் இல்லை. சில நேரங்களில் என்றில்லை, பல நேரங்களில் மலையாளத்திலிருந்து வரும் இயக்குநர்கள் தமிழ் ரசிகர்களைப் புரிந்து கொள்ளாதவர்களாகவே இருக்கிறார்கள்.



– லக்ஷ்மி சரவணக்குமார்

# குஜராத் டுடே

*Exclusive*



**கா**ந்தி மாநிலம் குஜராத். அதிவேகப் பாய்ச்சலில் முன்னேறி இந்தியாவை நிமிர்ந்து உட்கார வைத்திருக்கிறது. 'லஞ்ச-ஊழல் இல்லை; பவர் கட் இல்லை; வளம் பெருகுகிறது. வளர்ச்சி பிரமிக்க வைக்கிறது' என்று நரேந்திர மோடி தலைமையிலான பா.ஜ.க. அரசுக்குக் கிடைத்த நற்பெயர், சர்ச்சைகளையும் குற்றச்சாட்டுகளையும் மீறி, அவருக்கு இன்னொரு தேர்தல் வெற்றியையும் பெற்றுத் தந்திருக்கிறது. உதாரணமாக விளங்கும் வளர்ச்சித் திட்டங்கள், உலுக்கியெடுக்கும் உண்மைகள் என அனைத்தையும் ஆராய **கல்கி** முற்பட்டபோது, குஜராத் முதல்வரின் அலுவலகம் முழுமையாக ஒத்துழைத்தது... நன்றி.

# சுறுசுறு கவர்ன்மென்ட் ஆஃபிஸ்!

## கர்மயோகி மந்திரம்!

ஓர் அரசாங்க ஊழியரைப் பார்த்து, 'நீங்கள் அலுவலகத்தில் வேலை செய்வது எவ்வளவு முக்கியமோ, அதைவிட முக்கியம் உங்கள் வாழ்க்கையை நல்ல முறையில் அமைத்துக்கொள்வதுதான்'' என்று மேலதிகாரிகள் சொல்வார்களா? ஆனால், குஜராத் அரசாங்கம் இதைத்தான் சொல்லிக்கொண்டிருக்கிறது. இந்த அணுகுமுறையின் மூலம், ஐ.ஏ.எஸ். அதிகாரி முதல் கடைசி நிலை ஊழியர் வரை, தங்களுடைய வேலையை முழுமனதோடும் உற்சாகத்தோடும் செய்துமுடிக்க வேண்டும் என்ற எண்ணம் விதைக்கப்பட்டிருக்கிறது. இது எப்படிச் சாத்தியம் என்றால், அவர்கள் கை காட்டுவது கர்மயோகி மந்திரத்தைதான்.

கர்மயோகி மந்திரமா...? ஆம்! இந்தியச் சூழலுக்கு ஏற்ப பாரம்பரிய முறையில் வடிவமைக்கப்பட்ட மனிதவள மேம்பாட்டுப் பயிற்சித் திட்டம்தான் இது. இத்திட்டத்துக்கு 'கர்மயோகி மகா அபியான்' என்று பெயர்.

''அரசாங்கத்தில் பணிபுரியும் ஒருவர், ஊழியர், அதிகாரி என்பதைத் தாண்டி அவருக்குக் குடும்பக் கடமைகள், சமூகக் கடமைகள் என ஏராளம் இருக்கின்றன. அத்தனையையும் சிறப்பாகவும் வெற்றிகரமாகவும் செய்ய உதவுவதுதான் இத்திட்டம். வேலையில் அக்கறையும் ஈடுபாடும் கொண்டவர்களாகவும் இத்திட்டமே அவர்களை மாற்றிவிடுகிறது'' என்கிறார் குஜராத் அரசாங்கத்தின் தகவல் தொடர்பு துறை அதிகாரியும், கர்மயோகி பயிற்சியாளருமான முகுல் பட்.

இந்தப் பயிற்சியின் பலனாக, சக ஊழியருக்கு வேலைப் பளு அதிகரிக்கிற சமயத்தில், பக்கத்து சீட் ஊழியர் உதவுகிறார்! விடுப்பில் செல்லும்போது முக்கியமான வேலைகளை முடித்துவிட்டுச் செல்வது; விடுப்பில் இருப்பவரின் வேலையை மற்றவர்கள் இழுத்துப்போட்டுக் கொண்டு செய்வது என்ற மனநிலை வளர்ந்திருக்கிறது.

உடல்மொழி, நேர நிர்வாகம், சேவை உணர்வோடு பணியாற்றுவது, குழுமனப்பான்மையை வளர்த்துக்கொள்வது, மாற்றங்களை ஏற்றுக்கொள்ளும் மனப்பக்குவத்தை உண்டாக்குவது போன்ற பயிற்சிகளை உள்ளடக்கியதே கர்மயோகி திட்டம்.





■ காந்தி 'கீர்த்தி மந்திர்' உட்புறம்.

"இப்போதெல்லாம் எனக்குக் கீழே பணியாற்றுபவர்களை வேலை வாங்குவது எளிதாகவும், மனதுக்கு இதமாகவும் இருக்கிறது. அவர்களுடைய பொறுப்புணர்வு அதிகரித்துள்ளது. உயர்மட்ட ஊழியர்கள் முதல் - கீழ்நிலை ஊழியர் வரை - எல்லோரும் பரஸ்பரம் மரியாதையுடன் நடந்துகொள்கிறார்கள். விரைந்து வேலைகள் நடக்கின்றன'' என்கிறார் அரசு உயர் அதிகாரியான வி.என்.தேசாய்.

அரசாங்க அலுவலகத்துக்கு, தகவல் கேட்டு ஃபோன் செய்தால் உடனடியாக உதவுகிறார்கள். அவ்வாறு உதவ இயலவில்லையெனில், தகவல் கேட்பவரின் ஃபோன் நம்பரை வாங்கி வைத்துக்கொண்டு, தகவல் கிடைத்தவுடன் அவர்களே திரும்ப ஃபோன் செய்து தகவல் தெரிவிக்கிறார்கள். சம்பந்தப்பட்ட அதிகாரி விடுப்பு முடிந்து, திரும்ப வேலைக்கு வந்தவுடன், தகவல் கேட்டவரின் ஃபோன் நம்பருக்குத் தொடர்புகொண்டு தகவலை அளிக்கிறார்!

ஆரம்பத்தில் பொதுமக்களால் இந்த மாற்றத்தை நம்பவே முடியவில்லை. ஆச்சர்யத்தில் திகைத்துப் போனார்கள். மெல்ல, இந்தப் பணிக் கலாசாரம், ஊழியர்கள் தங்கள் குடும்பப் பொறுப்பை நிர்வகிப்பதிலும் பிரதிபலிக்க ஆரம்பித்துவிட்டது.

2003-ல் அறிமுகப்படுத்தப்பட்ட இந்தப் பயிற்சித் திட்டத்தைக் கற்றுக்கொண்டு பயிற்சி அளிப்பவர்கள் 3000 பேர். இதுவரை பயனடைந்த அரசு ஊழியர்கள் ஐந்து லட்சம் பேர். இவர்கள் மூலம், கர்மயோகி திட்டத்தின் ஒட்டுமொத்த பலனையும் அனுபவித்துக் கொண்டிருக்கின்றனர் குஜராத் மக்கள்.

• கஸ்தூர்பா வீடு...





• காந்தி 'கீர்த்தி மந்திர்' கோபுரம்



• காந்தி வசித்த தெருவிலுள்ள சிலை



# மகாத்மாவை மறந்த போர்பந்தர்?

## காந்திஜி மண்ணில் ஒரு தேடல்

''மகாத்மா காந்தி பிறந்த வீடு எங்கே இருக்கிறது?'' - இந்தக் கேள்வியை போர் பந்தர் நகரத்திலுள்ள டீ கடையில் விசாரித்த போது, ''இப்படியே போனா ஒரு மந்திர் வரும்; அதுக்குப் பக்கத்துலதான் இருக்கு'' என்றார் பூஞ்சா பாய் என்கிற தொழிலாளி டீயை உறிஞ்சியபடியே.

''நீங்க அந்த வீட்டுக்குப் போயிருக்கீங் களா?''

''இல்லை'' ஒற்றை வார்த்தையில் பதிலளித்துவிட்டுப் போய்க்கொண்டே யிருந்தார்.

இதே கேள்வியை வினோத் பாயிடம் கேட்டபோது, ''சிறுவயதில்தான் போயிருக் கிறேன்'' என்றார்.

நாம் சந்தித்தவர்களுள் அனேகம் பேர், மகாத்மா வீடு எங்கிருக்கிறது என்று தெரிந் தும், 'நேரில் சென்று பார்த்ததில்லை' என்றே கூறினார், மகாத்மாவை மறந்து விட்டதோ போர் பந்தர்!

'மகாத்மா காந்தி பிறந்த வீடு'-இப் படித்தான் முகப்பில் எழுதப்பட்டிருக் கிறது. இந்த வீடு மத்திய அரசின் தொல் பொருள் ஆய்வுத் துறையின் கட்டுப்பாட்டில் இருக்கிறது. வீட்டின் உள்புறம் புகைப் படம் எடுக்கத் தடை. 1777ஆம் ஆண்டு காந்திஜியின் கொள்ளுத் தாத்தா ஹரி ஜீவன்ஜி ரஹிதாஸ்ஜி காந்தியால் வாங்கப்பட்ட வீடு இது. பின்பு படிப்படியான மாற்றங் களைப் பெற்று, இன்று இருபத்திரண்டு அறைகளைக் கொண்ட மூன்று மாடிக் கட்டடமாகக் காட்சி தருகிறது.

வராண்டாவை அடுத்த சிறிய அறை யில், ஸ்வஸ்திக் சின்னம் பொறிக்கப்பட்டு, 'இந்த இடத்தில்தான் காந்திஜியை, புத்லி பாய் பெற்றெடுத்தார்' என்ற வாசகம். சுவரில் காந்திஜியின் பெற்றோர் ஓவியம், மிகப் பிரமாண்டமாக...

காந்திஜியின் அப்பா, ராஜ்கோட், போர்பந்தர் சமஸ்தான மன்னர்களுக்கு திவானாக இருந்தவர். நல்ல ஓவியருங்கூட. அவர் வரைந்த ஓவியங்கள் பூஜையறையை அலங்கரிக்கின்றன.

வீட்டின் இரண்டாவது மாடியிலிருந்து பார்த்தால், கஸ்தூர்பாவின் பிறந்த வீடு தெரிகிறது. அங்கேயும் அவர் பிறந்த இடத் திலும் ஸ்வஸ்திக் சின்னம் பதிக்கப்பட்டுள் ளது. இந்த வீடும் தொல்பொருள் ஆய்வுத் துறையின் கட்டுப்பாட்டில் இருக்கிறது.

காந்திஜியின் வீட்டுக்குப் பக்கத்தில் 79 அடி உயரத்தில் கம்பீரமாக நிற்கிறது, காந்தி கீர்த்தி மந்திர். வடிவமைத்தவர் புருஷோத்

• கலையழகுடனும் குஜராத்



• முகுல்பட்



தம் பாய் மேஸ்திரி. போர் பந்தர் மகாராஜா நட்வர்சிங்கினால் கட்டப்பட்டது கீர்த்தி மந்திர். ஆரம்பத்தில் இதற்கு காந்திஜி அனுமதி தரவில்லை. ஆகாகான் மாளிகையிலிருந்து கடைசி முறை சிறை வாசத்தை அனுபவித்து விட்டு விடுதலையானபோதுதான், "நான் ராம பக்தன் என்றாலும் என் பொருட்டு கட்டப்படும் கோயில், அனைத்து மதங்களின் பிரதிபலிப்பாக இருக்க வேண்டும்" என்ற நிபந்தனையுடன் அனுமதித்தார். மேலும், "அங்கே வருபவர்கள் என் உருவச் சிலையை வைத்துப் பூஜை நடத்தக்கூடாது. அஹிம்சை, சத்தியம் ஆகிய இரண்டு விஷயங்களை மட்டுமே பிரஸாதமாகப் பெற்றுக்கொண்டு போக வேண்டும்" என்றார். அதன்படியே காந்தி - கஸ்தூர்பா இருவரின் ஓவியங்கள் மட்டுமே இடம் பெற்றுள்ளன. அங்கே இருக்கும் மலர்களை எடுத்து, காந்திஜிக்கு சமர்ப்பித்து மரியாதை செய்யலாம். பூஜைகள் கிடையாது. காந்திஜிக்கு பிடித்த பஜனை பாடல்கள் மட்டுமே ஒலிக்கின்றன.

"காந்தி ஜெயந்தி அன்றும், அவரது நினைவு நாள் அன்றும் மட்டும்தான் அரசியல்வாதிகளும், மக்களும் வருவார்கள். மற்ற நாட்களில் யாரும் வருவதில்லை. சுற்றுலாப் பயணிகளின் வரத்தும் குறைவு" என்று வருத்தப்படுகிறார் வாஜுபாய் பார்மர். கல்லூரி ஒன்றில் பி.டி. மாஸ்டராக இருந்து ஓய்வு பெற்றவர். காந்தி கீர்த்தி மந்திருக்கு வந்து தினமும் வாலண்டரி சேவை செய்கிறார். "காந்தியை இந்த மண்ணைச் சேர்ந்த மக்கள் மறந்துவிட்டார்கள் போலிருக்கிறதே' என்றால், "அதற்கு நான் ஒரு போதும் அனுமதிக்க மாட்டேன். ஆண்டுக்கு ஒரு லட்சம் மாணவர்களை காந்தி கீர்த்தி மந்திருக்கு வரவழைப்பதே என் லட்சியம்" என்கிறார்.





● வாஜுபாய் பார்மர்



● ஜோதிகிராம் திட்டம்

● காற்றாலையில் மின்சாரம்



# ஆற்காட்டாரை அனுப்புவோம்

## பரபர மின்சாரப் புரட்சி!

குஜராத் முதல்வராக நரேந்திரமோடி முதன்முறையாகப் பதவியேற்றபோது அவர் முன்பு வைக்கப்பட்ட மிக முக்கியமான கோரிக்கை மின்சாரப் பற்றாக்குறை. பெண்கள் 'இரவில் சாப்பிடும்போதாவது மின்சாரம் கொடுக்கக் கூடாதா' என்றும், ஆண்கள், 'விவசாயத்துக்குக்கூட மின்சாரம் கிடைப்பதில்லையே' என்றும் புலம்பினர்.

தேவைக்கேற்ப மின் உற்பத்தி இருந்தாலும், மின் விநியோகம், பகிர்வு போன்றவற்றில் அதிகமான மின்சார இழப்பு ஏற்படுவதே நஷ்டத்துக்குக் காரணம் என்று கண்டறியப்பட்டது. மேலும், மக்கள், விரக்தியின் காரணமாக மின் கட்டணம் செலுத்துவதில் சுணக்கம் காட்டியதால், வருவாய் இழப்பும் ஏற்பட்டது. இது தவிர, மின்சாரத் திருட்டு வேறு.

நகரத்துக்குச் சமமாக கிராமம் பொருளாதார வளர்ச்சி அடைய வேண்டுமென்றால், விவசாயம் ஊக்குவிக்கப்பட வேண்டும். அதற்கு அடிப்படையாக, தங்குதடையற்ற மின்சார விநியோகம் வேண்டும். அந்த நோக்கில் திட்டங்கள் தீட்டப்பட்டன.

முதல் காரியமாக, மின் உற்பத்தி, விநியோகம், பகிர்மானம் ஆகியவற்றுக்குத் தனித்தனியே அரசு நிறுவனங்கள் அமைக்கப்பட்டன. 2003 செப்டம்பரில் தொடங்கி, முப்பதே மாதங்களில் 12,000 புதிய சக்தி வாய்ந்த டிரான்ஸ்ஃபார்ம்கள் நிறுவப்பட்டன. இருபது லட்சம் மின் கம்பங்கள், 57,000 கி.மீ. நீளத்துக்கு நடப்பட்டன. இத்தனை பணிகளுக்கும் ரூ.1,200 கோடி நிதி ஆதாரத்தை மாநில அரசே ஏற்பாடு செய்தது. இன்று 28,000 குஜராத் கிராமங்களில், 24 மணி நேரமும் த்ரீ ஃபேஸ் (3 Phase) மின்சாரம் தங்குதடையில்லாமல் கிடைக்கிறது. விவசாயத்துக்கு நாளொன்றுக்கு எட்டு மணி நேரம் மின்சாரம் கொடுக்கப்படுகிறது. எல்லா வீட்டு கனெக்ஷனுக்கும் மீட்டர் பொருத்தப்பட்டு, யூனிட்டுக்கு ஐம்பது காசு மட்டுமே கட்டணம் வசூலிக்கிறார்கள். விவசாயிகளிடமிருந்து ஆண்டுக்கு ஒரு முறை மட்டுமே, மோட்டாரின் குதிரைத் திறனுக்கேற்ப கட்டணம் வசூலிக்கப்படுகிறது. போட்டியிடும் தேர்தலின்போது, 'மின்சாரத்தை இலவசமாகக் கொடுக்கலாமே..'

**ப்ரியா படேல் (லேப் டெக்னீஷியன்):** இரவில் படிப்பதற்குப் போதிய சீரான மின்சாரம் இருந்ததால், என்னால் நன்கு படித்து தேர்வில் அதிக மதிப்பெண்களோடு வெற்றி பெற முடிந்தது.





● நர்மதா பவர் ஸ்டேஷன்...



● குஜராத்துக்குப் போங்கள்?!

# குஜராத்துக்கு!



**சம்பா (இல்லத்தரசி) :** சாவகாசமாக சமையல் செய்ய முடிகிறது. தொலைக்காட்சியில் தொடர்கள் பார்த்து மகிழ்கிறேன். இப்போது எங்கள் வீடே வெளிச்சமாக இருக்கிறது.

என்று கேட்டபோது, 'மின்சாரத்தை இலவசமாகத் தரமாட்டேன். மாறாக, எல்லா கனெக்ஷன்களுக்கும் மீட்டர் பொருத்தப்பட்டு, கட்டணம் வசூலிக்கப்படுகிறதா என்று கண்காணிப்பேன்' என்றார். ஆண்டு முழுதும் சீரான வருமானம் பெறாத விவசாயிகளிடம் ஆண்டுக்கொருமுறை மின் கட்டணம் வசூல் என்பது, மின் வாரியத்தின் நேரத்தையும் உழைப்பையும் மிச்சப்படுத்துகிறது; விவசாயிகளுக்கும் சௌகரியம் செய்திருக்கிறது.

மின்சார விநியோகத்தில் வீட்டு உபயோகம், விவசாயம் ஆகியவற்றுக்குத் தனித்தனி பகிர்மான கட்டமைப்புக் கொண்ட ஒரே மாநிலம் குஜராத்தான். இந்தச் செயல்பாட்டுக்கு 'ஜோதிகிராம் யோஜனா' என்று பெயர் வைத்திருக்கிறார் மோடி.

இத்திட்டத்தினால், கிராமங்களில் சிறு தொழில் நடத்தும் வெல்டர்கள், தச்சர்கள் ஆகியோரது வருமானம் உயர்ந்திருக்கிறது. மக்களின் வாழ்க்கைத் தரமும் உயர்ந்திருக்கிறது. திருவிழா சமயங்களில் தற்காலிக



● தெர்மல் பவர் ஸ்டேஷன் - குஜராத்



● ஒளியேற்றிய மோடி!



● நர்மதை பவர் ஸ்டேஷன் (க்ளோஸ்-அப்)





# நான்-ஸ்டாப் நரேந்திர மோடி - 1

"மதுவிலக்கைப் பொறுத்தவரை, சமூக-சமயத் தலைவர்கள் அரசியலுக்கு அப்பாற்பட்டுச் செயல்பட வேண்டும்."

- மோடி சிறப்புப் பேட்டி 20.4.2008 கல்கி இதழில்...

ஸ்பீட் போஸ்டுக்கு சி.டி. பரிசு!

அதிவேகமாக வந்தடையும், குஜராத் டுடே குறித்த 3 வாசக விமர்சனங்களுக்கு, துக்ளக் ஆண்டு விழாவில் மோடி ஆற்றிய உரையின் சி.டி. பரிசு! உடனே எழுதுங்கள்!



மின்னிணைப்பு கொடுத்து அரசே கட்டணம் வசூலிப்பதால், திருட்டு மின்சாரமும் தடுக்கப்படுகிறது. இதனால், ஏழு மில்லியனாக இருந்த மின் நுகர்வோர் எண்ணிக்கை எட்டரை மில்லியனாக உயர்ந்திருக்கிறது.

'கிராமங்களில் விவசாயமும் வேலை வாய்ப்பும் பெருகியதால், நகர்ப் புறங்களுக்குக் குடிபெயர்வது 33 சதவிகிதம் குறைந்திருக்கிறது. தடையில்லா மின்சாரத்தால் தொழிற்சாலைகள் லாபத்தில் இயங்குகின்றன. மாணவர்கள் வீட்டில் படிக்கிற நேரம் 80 சதவிகிதம் அதிகமாகியிருக்கிறது. சுயதொழில் செய்பவர்கள், இரவு நேரங்களிலும் வேலையில் ஈடுபடுவதால், வருவாய் அதிகரித்திருக்கிறது. வீட்டுப் பெண்களின் வேலைப்பளு 26 சதவிகிதம் குறைந்திருக்கிறது' - இது கிராமப்புற மேலாண்மைத் திட்ட நிறுவனம் சமர்ப்பித்துள்ள அறிக்கை.

தமிழகத்திலோ சென்னையைத் தவிர மற்ற இடங்களில் மின்சாரம் எப்போது வரும், எப்போது போகும் என்ற தெரியாத நிலைதான் இருக்கிறது. தொழிலகங்களில் உற்பத்தி தடையாகாமலிருக்க ஜெனரேட்டர் நிறுவி டீசலுக்குச் செலவு செய்வதுடன், ஜெனரேட்டர் வரி வேறு செலுத்த வேண்டியிருக்கிறது. முதல்வர் கூடவே சுற்றுவதை விட்டு விட்டு, ஒரு முறை ஆற்காட்டார் குஜராத்துக்குச் சென்று ஸ்டடி செய்து வந்தால் என்ன?

*(பயணம் தொடரும்)*



**மன்சூரி ஷாகித்** (மாணவர்) : பள்ளியில் மின்சாரம் தொடர்ந்து இருப்பதால் கம்ப்யூட்டர் பழகுவது தடையில்லாமல் நடக்கிறது. முன்பெல்லாம் பள்ளியிலேயே ஹோம் ஒர்க் முடித்துவிடுவோம். காரணம், இரவில் வீட்டில் கரெண்ட் இருக்காது. இப்போது அப்படி இல்லை.

*பயணம், பார்வை, படைப்பு :* **ப்ரியன், எஸ்.சந்திரமௌலி**

# பட்டுப் புடைவை பரிசுத் திட்டம்!

## ஆறு வார அதிரடி!

'குஜராத் டுடே' பக்கங்களை ஆவலுடன் படித்தீர்கள் அல்லவா? அவற்றுள் அடங்கியுள்ள ஒரு முக்கியமான வார்த்தையைக் கண்டுபிடித்து எழுத, இமேயுள்ள கட்டங்களை நிரப்புங்கள். வட்டமிட்ட எழுத்துகளை வரிசைப்படுத்தி கடைசி கட்டங்களை நிரப்புங்கள். கூப்பனைக் கத்தரித்து, **'ஆறு வார அதிரடி 1' கல்கி, 47-NP, ஜவஹர்லால் நேரு சாலை, சென்னை - 600 032 என்ற முகவரிக்கு 19.3.08க்கு முன்னதாகக் கிடைக்கும்படி அனுப்புங்கள்.** சரியான விடையை எழுதும் ஒரு வாசகருக்கு, **பாலம் சில்க்ஸ் வழங்கும் பட்டுப்புடைவை பரிசு!** ஒன்றுக்கு மேற்பட்ட வாசகர்கள் சரியாக எழுதினால் குலுக்கல் முறைதான். ஆசிரியர் தீர்ப்பே இறுதி!

*எடுங்கள் பேனாவை;*
*முந்துங்கள் பரிசு பெற...*

| | | | | |
|---|---|---|---|---|
| ம | ந் | தி | ர | ம் |

*(அரசாங்க ஊழியர்களை மாற்றிய...)*

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ப | கி | ர் | மா | ன | ம் |

*(மின்சார.... மேம்பட்டது)*

| | | | | |
|---|---|---|---|---|
| கு | ஜ | ரா | த் | தி |

*(உள்ளூர் மக்களும் மொழியும்)*

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| கீ | ழ் | நி | லை | ஊ | ழி | ய | ர் |

*(கர்மயோகி திட்டத்தால் இவர்கள் வரை பரஸ்பர மரியாதை பெருகியுள்ளது)*

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ம | கா | த் | மா | கா | ந் | தி |

*(உலகே போற்றும் குஜராத் பிரபலம்)*

| | | | | |
|---|---|---|---|---|
| ந | ரே | ந் | தி | ர |

*(முதல்வரின் முதல் பாதி)*

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | | | | |

*(புகழுக்கு ஒரு கோயில்!)*

## கல்கி -பாலம் சில்க்ஸ் வழங்கும் போட்டி-1





# கல்கி



2008 மார்ச் 16
சர்வஜித் பங்குனி 3
மலர் : 66
இதழ் : 33

தமிழ்த்திரு
நாடுதன்னைப்
பெற்ற தாயென்று
கும்பிடடி பாப்பா
- பாரதியார்

## தும்பை விடுத்து வாலைப் பிடிக்கும் சிதம்பரம்!

**வி**வசாயக் கடன் தள்ளுபடி என்பது இந்த நாட்டிலோ அல்லது அதன் பட்ஜெட்டிலோ ஒரு புதிய விஷயம் அல்ல. ஆனால், 60,000 கோடி ரூபாய் தள்ளுபடி என்பது வரலாறு காணாதது; துணிச்சல் மிக்கது. இவ்வளவு பெரிய தொகைக்கு எந்த ஒரு முடிவு எடுக்கப் பட்டாலும், ஆழ்ந்த சிந்தனைக்குப் பிறகே எடுக்கப்பட வேண்டும். நிதியமைச்சர், அவ்வாறு செய்ததாகத் தெரியவில்லை. தேர்தல் வருகிறது என்கிற ஒரே சிந்தனையில் எடுக்கப்பட்ட முடிவாக அது அமைந்திருக்கிறது. அந்த 60.000 கோடியை வங்கிகளுக்கு அரசு எவ்வாறு ஈடு செய்யும் என்பது குறித்த, ஒரு திடமான திட்டம்கூட இல்லை. இந்தத் தள்ளுபடியினால் விவசாயிகளுக்குக்கூட முழுப் பயன் இருக்குமா என்பதும் சந்தேகம்தான். ஏனெனில், பெரும்பாலான சிறு, குறு விவசாயிகள் கந்து வட்டிக்குக் கடன் வாங்கிவிட்டுத்தான் அவஸ்தைப்படுகிறார்களேயொழிய, வங்கிக்கடன் சுமையால் யாருமே வாடி, வதங்கித் தற்கொலைக்கு முயற்சி செய்வதில்லை. சொல்லப் போனால், விவசாயக் கடன்களைத் திரும்ப வசூலிப்பதென்பது வங்கிகளுக்குத்தான் எப்போதுமே சவாலாக இருந்திருக்கிறது. சிதம்பரத்தின் 60,000 கோடி தள்ளுபடி காரணமாக, அதிக ஆதாயம் பெறப்போவது கடன்கொடுத்த வங்கிகள்தான். எந்த முயற்சியும் செய்யாமலே, கொடுத்த பணம் காலப்போக்கில் அரசு மூலமாக அவர்களிடம் திரும்பி வந்துவிடும். இந்தப் பெருஞ்சுமையை, வரி செலுத்தும் ஒவ்வொரு இந்தியக் குடிமகனும்தான் எதிர்காலத்தில் தாங்கப்போகிறான்.

ரொம்ப அவதிப் படறியேன்னு
கொசு வலை கொண்டு
வந்திருக்கேன்...

எரிபொருள்
விலை உயர்வால்
விலைவாசி
ஏற்றம்

பட்ஜெட்
சலுகைகள்




பட்ஜெட்டில் இறுதி நிதிப் பற்றாக்குறை 1,33,287 கோடி ரூபாய் என்கிற கொடுமையான உண்மையைக்கூட மறக்கடித்துவிட்டு, 60,000 கோடி ரூபாய் கடன் தள்ளுபடிதான் முந்தி நிற்கிறது. யதார்த்தத்தில் பார்த்தால், கடன் தள்ளுபடித் தொகையும்கூட பற்றாக்குறைதான். ஆகவே, மொத்த நிதிப் பற்றாக்குறை என்பது 1,33,287 கோடி + 60,000 கோடி - அதாவது, கிட்டத்தட்ட இரண்டு லட்சம் கோடி ரூபாய் பற்றாக்குறை!

இதை ஈடு செய்ய, அரசுக்கு நோட்டு அச்சடிப்பது அல்லது மேலும் வரி வசூலிப்பது தவிர வேறு மார்க்கமே இல்லை!

இந்தச் சூழலில், ஒன்பது சதவிகித அல்லது 8.6 சதவிகித பொருளாதார வளர்ச்சி அடைகிறோம் என்று சொல்லிக்கொள்வதில் அர்த்தமே இல்லை. விலைவாசிகள் உயரவே செய்யும். உற்பத்தித் தொழிலில் ஈடுபட்டுள்ள பெரும்பணக்காரர்கள், தங்கள் உற்பத்திப் பொருட்களின் விலையை உயர்த்தி எந்த நிலைமையையும் சமாளித்துக்கொள்வார்கள். அமைப்பு ரீதியாக ஒருங்கிணைக்கப்பட்ட மாதச் சம்பளக்காரர்கள், அகவிலைப்படி உயர்வதால் சுதாரித்துக்கொள்வார்கள். இப்பிரிவுகளுள் அடங்காத ஏழை - எளியோர்தான் விலைவாசி உயர்வால் மிகவும் வாடி வதங்குவர். நடுத்தர வர்க்கத்தினர் திணறுவார்கள்.

கடன் சுமை நீங்கப் பெற்ற விவசாயிகள், இன்னும் சில மாதங்களுக்கு அந்த நிகழ்வைக் கொண்டாடக்கூடும். அதற்குள் பருவமழை மீண்டும் பொய்த்தாலோ அல்லது அளவுக்கு மீறி பெய்தாலோ, மீண்டும் அவர்களுடைய சோக சகாப்தம் தொடங்கிவிடும். திறம்பட தீட்டிய விவசாயக் கொள்கையும் அதையொட்டிய தீவிர வழிகாட்டலும் இல்லாத நிலையில், கடன் தள்ளுபடி விவசாயிகளுக்கு உதவாது. விவசாயம் பொய்க்கிற காலத்தில் அவர்களுக்கு மாற்றுப் பணி வேண்டும். மாறி வரும் பருவச் சூழல், காலச் சூழல், சந்தைச் சூழல் ஆகிய மூன்றையும் எதிர்கொண்டு, விஞ்ஞான ரீதியாக தொழில் அணுகுமுறையை அவ்வப்போது சீரமைத்துக்கொள்ள, விவசாயிகளுக்கு இடையறாத உதவியும் அறிவுறுத்தலும் தேவை.

இவையெதுவுமின்றி 60,000 கோடியை மட்டும் ரத்து செய்வது என்பது, தும்பை விட்டு வாலைப் பிடிக்கும் கதைதான்! இதை நாம் மட்டும் சொல்லவில்லை; நிதியமைச்சரின் நெருங்கிய உறவினரேகூட சுட்டிக்காட்டியிருக்கிறார்! ●

# புள்ளிகள்... கோலங்கள்...

பட்டுக்கோட்டை சுகுமாரன்

10



"உங்க பணக்கார பயத்தைக் காண்பிச்சுட்டீங்க..." என்றபடி 'பைக்'காரன் தலைக் கவசத்தைக் கழற்ற, ஃப்ரெஞ்ச் தாடி வைத்த இளைஞனின் முகம் வெளிப்பட்டது.

"போலீஸுக்குச் சொல்ல வேணாம்னு சொன்னேன். படையோடு வந்துட்டீங்க. உங்கள் மகளைப் பத்திய அந்தரங்கத்தை சாட்சிகளை வச்சுக்கிட்டு சொல்லணும்னு ஆசைப்பட்டீங்களா சார்?"

"விஷயத்துக்கு வா..."

"முதல்ல அறிமுகம். ஐ'ம் அசோக். ஃப்ரீலான்ஸ் ஃபோட்டோகிராஃபர்" என்று கை நீட்டினான்.

சந்தேகமாகக் கைகுலுக்கினார், பொன்ராஜ்.

"சார், செய்தியைச் சொல்லும் முன் எனக்கொரு உறுதி தரணும். உங்க தரப்பிலிருந்து எனக்குப் பிரச்னையோ, ஆபத்தோ வராதுன்னும் அப்படி வந்தால், நீங்கள் எனக்கு உதவி பண்ணுவீங்கன்னும் வாக்கு தரணும். ஏன்னா, இந்த மேட்டரை உங்ககிட்ட சொல்றதுல எனக்கு 'ரிஸ்க்' இருக்கு. அஃப்கோர்ஸ், நான் ஆரம்பத்துலயே அந்தக் காரியத்தை மறுத்திருக்கணும். பணத் தேவை, பண்ணிட்டேன். அப்புறம் ஒரு உறுத்தல். என்னை உங்களுக்குத் தெரியாதுன்னாலும், உங்களை எனக்குத் தெரியும். நீங்கள் கலந்துக்கிட்ட பல விழாக்கள்ல பத்திரிகைகளுக்காக நான் படம் எடுத்திருக்கேன். 'புள்ளிகள்... கோலங்கள்...' பூஜையின் போது நான்தான் 'ஸ்டில்ஸ்' எடுத்து ஆல்பம் போட்டுக் கொடுத்தேன். போராடி, ஒவ்வொரு படியா ஏறி மேலே வந்திருக்கீங்க..."

"......"

"சில நாட்களுக்கு முன்பு ஒரு நபர் மூலம் - உங்க குடும்பத்தைச் சேர்ந்தவங்க... பேர் தெரியாது. பட்... அவங்க ஒரு லேடி - கலேகாளைப் பின்தொடர்ந்து போகணும். அவங்க எங்கெங்கே போறாங்க. யார் யாருடன் பேசறாங்கன்னு ஃபாலோ பண்ணி, ஃபோட்டோஸ் எடுத்துத் தரணும்னாங்க. ஆங்கிலத்துல 'பாப்பராஸி'னு சொல்வாங்களே. அந்த மாதிரியான வேலை. ரெண்டு நாளா சேஸிங்தான். எதுவும் வித்தியாசமா தெரியலை. சரியாய் வீட்டிலிருந்து கிளம்பி காலேஜ் போனாங்க. காலேஜ் முடிஞ்சதும் வீடு திரும்பினாங்க. அலைச்சல்தான் மிச்சமாகும் போலிருக்கேனு நினைச்சுக்கிட்டிருந்தேன். மூணாவது நாள் அடிச்சது ஜாக்பாட்..."

பொன்ராஜ், புருவம் நெரித்தார். அந்த அசோக்,

"ஆமா சார். உங்க டாட்டர், ஒரு ஆணோடு ஃபைவ் ஸ்டார் ஹோட்டலுக்குப் போய், கொஞ்சம் மது அருந்திவிட்டு டிஸ்கொத்தே ஆடினாங்க" என்றான்!

(தொடரும்)

ஒரு பக்கத் தொடர்

# ஒரு சொம்பு ஜலம்!

"எனக்கு என்ன செஞ்சிருக்கா அவ? சீதாராமன் என்ற என்னுடைய இதிகாசச் சிறப்புமிக்க பெயரைச் சுருக்கி, திரித்து 'சீதாச்சு' என்று நாமகரணம் செய்ததுதான் அவள் செய்த மிகப் பெரிய சாதனை."

"சீதாச்சுவப் பார்க்கணும்போல இருக்குடான்னு அவ பினாத்தினதைக் கேட்டு அந்தக் கூறுகெட்ட கப்புணி ஃபோன் பண்ணி, இவகிட்ட சொன்னானாம்... என்னைப் பார்த்துட்டுச் செத்துப்போனால் அவளுக்கு வைகுண்ட மோக்ஷம் கெடைச்சிருமோ...? சுத்த பேத்தல்... அவா அவாளுக்கு ஆயிரத்தெட்டு வேலை இருக்கு... அதையெல்லாம் விட்டுப்புட்டு இவளைப் போய் தரிசிக்கணுமாக்கும். தான் பெரிய மஹாராணின்னு மனசுல நெனைப்பு..."

"எல்லாம் என் தலையெழுத்து. அந்தப் பாழாப்போன ஃபோன் எனக்குதான் வரணுமா? இதப்பாருங்கோ, உங்க சித்தியப் பார்க்கப் போறதும் போகாததும் உங்க இஷ்டம். தயவுசெஞ்சு என்னைக் கூப்பிடாதீங்கோ நான் வரமாட்டேன் நீங்களாச்சு, உங்க பொறந்தயிடமாச்சு" மனைவி பொரிந்து தள்ளிவிட்டாள்.

இன்னும் ஞாபகம் இருக்கிறது. பத்து வயதுச் சிறுவனாக இருக்கும்போது அம்மாவுடன் கிளம்பி வடவாறு, அரசலாற்றை இடுப்பளவுத் தண்ணீரில் கடந்து, சித்தியின் வீட்டை அடைவதற்கும், நண்பகல் மணி பன்னிரண்டு ஆகவும் சரியாக இருந்தது. எதற்காக சித்தியின் வீட்டுக்கு வந்திருக்கிறோம் என்பதை ஊரிலிருந்து கிளம்பும் போதும் சரி, ஆற்றைக் கடந்து நடந்து வரும்போதும் சரி, அம்மா அதைப் பற்றிச் சொல்லவே இல்லை.

"வாடி யோகம்... என்ன ஆத்துல புளி ஆயிடுத்துன்னு இங்க வந்தியா?" நமுட்டுச் சிரிப்புடன் எகத்தாள அழைப்பாக இருந்தது. சித்தியின் பெருத்த சரீரத்துக்கும், சிவந்த களையான முகத்துக்கும் அந்தச் சிரிப்பும் எகத்தாளமும் ஒரு அங்கமாக விளங்கின என்றாலும், அதில் ஒரு பணக்காரத் திமிரே மேலோங்கி இருந்ததை நான் உணர்ந்தேன். அம்மாவாலும் ஒன்றும் சொல்ல முடியவில்லை. க்ஷேம லாபங்களை வாசற்படியிலேயே விசாரித்துவிட்டு பத்து நிமிடம் கழித்து உள்ளே கூப்பிட்டாள். ஏதோ வேண்டா வெறுப்புடன் கூப்பிடுவதுபோல் இருந்தது.

சாப்பாடு முடிந்து கிளம்புவதற்குத் தயாரானோம்.

"கமுலு! அம்பி ஐந்தாவது முடிச்சுட்டான். உனக்குத்தான் தெரியுமே... நம்மூர்ல ஹைஸ்கூல் கெடையாதுனு... பம்மங்குடி ஸ்கூல்ல படிக்கணும்னா, எட்டு கிலோ மீட்டர் நடந்து போகணும். ஏற்கெனவே பொண்ணு தையல் படிக்கறா. இந்தப் புள்ளைய இங்க இருக்கற மிடில் ஸ்கூல்ல சேர்த்து உன் கூட வச்சுக் கோயேன்... உனக்கும் உதவியா இருக்கும்... ஸ்கூல் ஃபீஸ், புத்தக செலவெல்

# திரு



லாம் நீயே பார்த்துக் கொண்டால், புண்ணியமா போகும். நாலு புள்ளைகளைப் பெத்துட்டு ரொம்ப கஷ்டப்படறேண்டி... உன்னை விட்டா எனக்கு யார் இருக்கா?'' அம்மா அழத் தொடங்கினாள். அம்மா எதற்காக வந்திருக்கிறாள் என்ற விஷயமும் எனக்குப் புரிந்தது. சித்தி மசியவே இல்லை. நீண்ட நேரத்துக்குப் பிறகு ஒத்துக்கொண்டாள்.

திரும்பி ஊருக்கு வந்த பிறகு, அன்று முழுவதும் அழுதுகொண்டிருந்தேன்.

''என்னால அவாத்துல தங்கிப் படிக்க முடியாது. பம்மங்குடி ஸ்கூல்ல சேர்த்து விடுங்கோ.. இல்லன்னா, நான் படிக்காமலே இருந்துடறேன்...''

டிரங்க் பெட்டியுடன் என்னைக் கொண்டுவந்து சித்தியின் வீட்டில் தங்க வைத்துவிட்டு, திரும்பிப்போகும்போது இரண்டு ரூபாயைக் கையில் திணித்துவிட்டுப் போனாள். அம்மா விட்டுச் சென்ற பிறகு ஒரு தனிமை படர்ந்திருந்தது. புதிய ஊர், புதிய மக்கள், முதல் நாள் மரியாதை சித்தியிடமிருந்து பிரமாதமாகவே கிடைத்தது.

அரசலாற்றுக்குக் குளிக்கச் செல்லும்போது ஒரு சொம்பை எடுத்துச் செல்வது வழக்கம். சிறு பையன் என்பதால், ஆற்றில் இறங்கிக் குளிக்க வேண்டாமென்று சொம்பைக் கொடுத்திருந்தாள். தண்ணீரை மொள்ளும்போது கைதவறி ஆற்றில் சொம்பு விழுந்துவிட, அடித்துச் சென்றது சுழல். நீரின் போக்கு அதிகமாக இருந்ததால் பிடிக்கமுடியவில்லை.

''ஐயோ! இதற்குவேறு திட்டுவாளே!'' வீட்டை நெருங்க நெருங்க 'திக் திக்' என்றது.

வாசலில் எண்ணெய் வியாபாரி குவளையால் சித்தி பிடித்திருந்த பாட்டிலில் எண்ணெய் ஊற்றிக்கொண்டிருந்தான். கையில் இருந்த பாட்டிலில் நிரம்பிவிட, மீதமிருந்த எண்ணெயை ஊற்ற பாத்திரம்

இல்லை. ரேழி, கூடம், தாழ்வாரம் என அனைத்தையும் தாண்டி வீட்டுக்குள் சென்று எடுத்துவர, குறைந்தது இரண்டு நிமிடங்களாவது ஆகும்.

''இதோ நோக்க வந்துட்டானே! மிச்ச மிருக்கற எண்ணெயை அந்தச் சொம்புல வாங்கிண்டு வா'' சொல்லிட்டு உள்ளே சென்றாள்.

''அது... வந்து... குளிக்கும்போது... சொம்பு... கைதவறி ஆத்துல விழுந்துடுத்து சித்தி. என்னால பிடிக்க முடியல...'' அதன் பிறகு பேச வார்த்தைகள் இல்லாமல் போனது.

''கடங்காரா! இவ்வளவு சாதாரணமா சொல்றியே... வந்து வாச்சுருக்கு பாரு.. உங்காத்துச் சொம்பா இருந்தா இப்படித் தொலைச்சுட்டு வருவியா? ஊரான் வீட்டு சாமான்னா நன்னா வந்துருவேளே ஆத்தாளும், புள்ளையும்.''

அழுகை பீறிட்டுக்கொண்டு வந்தது. அப்பாகூட என்னை இப்படித் திட்டிய தில்லை.

கட்டிய துண்டோடு நடக்க ஆரம்பித்த வன்தான்...

''என்னடா ஆச்சு? ஏன் அழுறே?'' என்ற அம்மாவின் கேள்விகளுக்குப் பதிலாக அழுகையே பீறிட்டுக்கொண்டு வந்தது.

''ஐயோ! என்ன ஆச்சோ இந்தப் புள்ளைக்கு...?'' அம்மாவும் அக்காவும் மெது வாக என்னைச் சமாதானப்படுத்தினார்கள்.

''எனக்குப் படிப்பே வேண்டாம்மா! இங்கேயே இருந்துடறேன்.''

''அசடு மாதிரி பேசாதே! அவ யாரு? சித்திதானே...'' அம்மா என்னை சமாதானப் படுத்தியதையும் எனக்காக அழுததையும், இன்றும் என்னால் அசை போடாமல் இருக்க முடியவில்லை.

**நா**ன் புது சொம்புடன் சித்தியின் வீட்டுக்குள் நுழைந்த அடுத்த நொடியே...

''சோக்கு! வந்துட்டியா... வா... வா... என்னடா இப்படிப் பண்ணிட்டே?''

இப்படிப் பேசியது எனக்கு அதிர்ச்சி யாகத்தான் இருந்தது. இன்னும் பயம் போகவில்லை.

''சொம்பு கெடைச்சிடுத்துடா. மேலத் தெரு கொழந்தேள் கொண்டுவந்து கொடுத்ததுகள்... ரெண்டு எடத்துல நசுங்கி யிருக்கு... வேற ஒண்ணுமில்லடா...''

அம்மா கொடுத்த சொம்பை நீட்டி னேன்.

நான் உழைத்த உழைப்புக்கெல்லாம் பதிலாய் அவள் எனக்குச் செய்தது, ஸ்தலை

## தம்பிகள் சீசன்!

**இ**து இயக்குநர்களின் தம்பிகள் ஹீரோ வாகும் காலம். பூபதி பாண்டியனின் தம்பியைத் தொடர்ந்து, இப்போது 'அலிபாபா' படம் மூலம் திரையுலகில் நுழைகிறார், விஷ்ணுவர்தனின் தம்பி கிருஷ்ணா. மணிரத்னத்தின் 'அஞ்சலி'யில் குழந்தை நட்சத்திரமாக அறிமுகமான கிருஷ்ணா, 'இருவர்', சந்தோஷ்சிவனின் 'டெரரிஸ்ட்' படங்களில் முக்கிய வேடங்களில் நடித்தவர். 'அலிபாபா'வுக்குக் கதை, திரைக்கதை எழுதி இயக்குபவர் விஷ்ணுவர்தனின் இணை இயக்குநரான நீலன் கே.சேகர்.



• கிருஷ்ணா, விஷ்ணுவர்தன்

''அலிபாபாவில் அழகான விஷயத்தைச் சொல்லியிருக்கிறோம். நல்ல ஒரு படத்தின் மூலம் ஹீரோவாவதில் பெருமையடைகிறேன். அண்ணன் சந்தோஷப்படும் அளவுக்கு என் வளர்ச்சி இருக்கும்'' என்கிறார் கிருஷ்ணா.

– சுமி



''நம்ம ஹீரோயின் எதுக்குக் கோபமா இருக்காங்க?''

''அவங்க டைவர்ஸ் கேஸ்கூட திருட்டு வி.சி.டி.யா வந்துருச்சாம்!''

- அம்பை தேவா

ஃபீஸ், புத்தகம், வருடத்துக்கு ஒருமுறை புது ஆடைகள்.

இப்படி என்னைச் சிறுவயதில் கொடுமை செய்த சித்தி, இன்று இழுத்துக் கொண்டிருக்கிறாள். அவளைப் பார்க்க நான் போக வேண்டுமாம். சரியென்று ஒரு முடிவுக்குப் பிறகு கிளம்பினேன்.

அக்ரஹாரத்தினூடே நடந்து சென்ற போது, மீண்டும் இளமைகால நினைவு களும் அக்ரஹாரமும், மனிதர்களும் மனசில் துளிர்த்தன. புதிய இடத்துக்கு வந்தவனைப்போல நடந்துகொண் டிருந்தேன்.

''இவாத்துக்கு பத்து நாள் சிதகம். இவா அவாளுக்கு மூன்று நாள் தாயாதி'' என்ற அக்ரஹாரவாசிகளின் ரகசியப் பேச்சுகள் எதையோ உணர்த்தியது.

''பத்து நாள் காரியம் தடபுடலா செஞ்சுப் புடணும் இவனே... நன்னா வாழ்ந்துட்டுப் போயிருக்கா...'' என்ற புரோகிதர்களின் பிரசங்கங்களும், நான் இவ்வளவு தூரம் பஸ் பிடித்து செலவு செய்துகொண்டு வந்ததற்கு ஓர் அர்த்தத்தை ஏற்படுத்தியது. வெறுமனே இவளைப் பார்த்துவிட்டுப் போவதற்கு பதில், இறந்த தினத்துக்கு வந்ததாகிவிட்டது என்று ஒருவித அற்ப சந்தோஷம் அடைந்தேன்.

''ஏண்டா சேதாச்சு... நேத்திக்கே வந்திருக் கப்படாதா? அம்மாவப் பாருடா... நீ வரு வேன்னு உயிர எக்கி வச்சிருந்தாளேடா... ஊட்டி ஊட்டி வளர்த்தாளேடா...'' அதன் பிறகு வசனம் இல்லாததால் ஒப்பாரி ஓங்கியது. வேறு யாருமில்லை சித்தியின் தவப்புதல்விதான் இப்படிப் பேசினாள்.

சித்தியைப் படுக்க வைத்திருந்தார்கள். பெண்கள் கூட்டம். நான் வந்திருக்கிறேன் என்பதைக் காட்டிவிட்டு வெளியே வந்தேன்.

எல்லா சடங்குகளும் முடிந்து, இடு காட்டில் அடக்கம் செய்துவிட்டு வீடு திரும்புவதற்கு மதியம் இரண்டுமணி ஆனது.

எங்கிருந்தோ ஆர்டர் செய்யப்பட்டு வந்த சாப்பாடு பரிமாறப்பட்டது. நான் வழக்கம்போல அந்த ரெண்டாங்கட்டு நிலைப்படி அருகில் உட்கார்ந்துகொண் டேன். அதில் உட்கார வேண்டும்போல் தோன்றியது. சின்னக் கிண்ணத்தில் சித்தி தந்த பாயாசத்தின் இதமான சுவை ஞாபகம் வந்தது.

சாப்பிட்டுக்கொண்டிருக்கும்போது திடீ ரென்று புரை ஏறியது.

''தலைல தட்டுங்கோ...! சேதாச்சுக்கு தீர்த்தம் கொடுங்கோ...''

இருமல் அடங்கவும், தங்கை சொம் பில் ஜலம் கொண்டு வந்து நீட்டவும் சரி யாக இருந்தது. குடித்துவிட்டு சொம்பைக் கீழே வைக்கும்போது, என்னையும் அறியா மல் கண்கள் கலங்கின. அரசலாற்றில் நான் விட்ட அதே சொம்புதான்.

''என்ன இருந்தாலும் பாசமில்லாமப் போகுமா... சேதாச்சு மெட்ராஸ்லேந்து வந்திருக்கானே...'' சாதம் பரிமாறிக்கொண்டிருந்த மாமி, கண்ணீரின் வழியே மங்கலாகத் தெரிந்தாள்.

அந்தச் சொம்பை யாருக்கும் தெரியாமல் ஒரு பாலிதீன் கவரில் போட்டுக்கொண்டு, சென்னைக்குக் கிளம்பினேன்.



# அக்கு

சில ஆங்கிலப் படங்களைப் பார்த்துவிட்டு தியேட்டரிலிருந்து வெளியே வருகையில் 'மாமூ! இந்த மாதிரி படம் தமிழ்ல எப்படா வரும்?' என்ற ஆதங்கமான குரல் கேட்கும். இதோ வந்துள்ளது ஃ!

படத்தில் எல்லாமே புதுசு! தங்கையைக் காதலிக்கும் நாயகனைக் கொல்வதற்கு, அரிவாள் எடுக்கும் வில்லன் அண்ணனை மட்டுமே இதுவரை சினிமாவில் பார்த்தோம். இதில் வரும் அண்ணன், வெடிகுண்டுகளைத் தயாரிக்கும் ஹைடெக் வில்லன். ஆகவே, நாயகனின் 'ஷூ'வில் வெடிகுண்டை வைத்து ஓடவிடுகிறான். நின்றால் வெடித்து, சுற்று வட்டாரமே சின்னாபின்னமாகிவிடும்.

லஞ்சம் வாங்குவது, பலாத்காரம் செய்வது, ஹீரோவிடம் கேவலமாக அடி வாங்குவதென, இதுவரை போலீஸைத் தாழ்த்தியே வந்துள்ளார்கள். இந்தப் படத்தில் அதுவும் புதுசு! அவர்களின் ஒவ்வொரு அசைவிலும் துடிப்பு காட்டப்பட்டுள்ளது.

ஒரு பக்கம், காலில் வெடிகுண்டுடன் ஓடும் நாயகனும் அவனைக் காப்பாற்றக் கூடவே செல்லும் குழுவும். இன்னொரு பக்கம், தீவிரவாதிகளை முற்றுகையிட அணு அணுவாக நகரும் போலீஸ் படை... மொத்தப் படமும் இந்த இரண்டு புள்ளிகளிலேயேதான் நகர்கிறது. ஆனாலும் ஓர் இடத்தில்கூட அலுப்பு ஏற்படவில்லை! இயக்குநர் மாமணிக்கும் குழுக்கும் பெரிதாக சபாஷ் போடலாம்.

'வித்தியாசமான படம். ஆனால், போதிய விளம்பரம் செய்யப்படவில்லை' என்றொரு பேச்சு உலவுகிறது. நல்ல படத்துக்கு விளம்பரம் தேவையில்லை. இந்தப் பூவின் வாசம் வெளியே வேகமாகப் பரவிக்கொண்டிருக்கிறது. வெற்றி மாலை யாவது நிச்சயம்!

- ஆரணி யுவராஜ்



## கயிலை தரிசனம்... பிறவி புண்ணியம்...

2007-ம் வருடம் 48 குழுக்களை வெற்றிகரமாக திருக்கயிலாயகிரிவலம் செய்ய வைத்து அழைத்து வந்த முதன்மை வெற்றி நிறுவனமான

நேபாள காட்மண்ட் **சாம்ராட் டூர்ஸ் & டிராவல்ஸ்**

நிறுவனத்துடன் இணைந்து நடத்தும்

# திருக்கயிலாய மானசரோவர் புனித யாத்திரை

**ஹெலிகாப்டர் மூலம் 11 நாட்கள், விமானம் மூலம் 15 நாட்கள், இரயில் மூலம் 22 நாட்கள், புறப்படும் தேதிகள் : மே 18, ஜூன் 3,20 ஜூலை 8, ஆகஸ்ட் 17,27, செப்டம்பர் 7**

**திருக்கயிலாய உள்பரிக்கிரமா** (Inner Kora - All Three) - **21 நாட்கள் புறப்படும் தேதி ஆகஸ்ட் 17**

## பூலோக வைகுண்டமாம் சாளக்கிராம முக்திநாத் தரிசனம் மற்றும் ஜனக்பூர்

**மாதம் ஒரு குழு புறப்படுகிறது. ஏப்ரல் 18 முதல் 14 நாட்கள்**

## அமர்நாத் – பனிலிங்க தரிசனம், வைஷ்ணவி தேவி மற்றும் பொற்கோவில்

**ஜூலை மற்றும் ஆகஸ்ட் மாதங்களில்**

குழுவாக வரும் யாத்திரிகளுக்கு சிறப்பு சலுகை தரப்படும். மிகச் சரியான கட்டணம்... உயர்தர வசதிகள் கொண்ட சேவை !

தரமான நிறுவனம் ...

மனநிறைவான யாத்திரை !

## சாம்ராட் ஹாலிடேஸ்

**திருக்கயிலாயம், முக்திநாத், நேபாள், சுற்றுலா நடத்துனர்கள்**

2-C, வித்யாலயா ரோடு, ராமகிருஷ்ணா பார்க் அருகில், சேலம்-7.

0427-3203220, 4262888 93623 33601, 84432 58898

e-mail : samratholidays@yahoo.com / kailashsamrat@yahoo.com

---

## கல்கி குழும பத்திரிகை நிறுவனத்தில் பணி புரிய ஆவலா?

**இளமை, ஆர்வம், தன்னம்பிக்கை, வேகம், விவேகம் மற்றும் முன் அனுபவமுள்ள பட்டதாரிகள் கீழ்க்கண்ட பணிகளுக்கு உடன் விண்ணப்பிக்கவும்.**

**Personal Assistant to top Management**

with typing knowledge in both English & Tamil, Computer application and Front Office Management skills

**Business Executive**

Creative and Articulate, with marketing and space selling skills

**Accounts Assistant**

with basic knowledge in Accounts and Book keeping, computer applications and data entry skills.

**Sub-Editor** (for our children's magazine)

with fluency in English, love for children and interest in journalism

தங்கள் முழு விவர குறிப்புடன் மார்ச் 15க்குள் விண்ணப்பிக்கவும்.

உறைமேல் எந்தப் பணிக்கான விண்ணப்பம் என்பதைத் தவறாமல் குறிப்பிடவும்.

**பரதன் பப்ளிகேஷன்ஸ் பி. லிட்,**

47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 32

# கானம் பாடும்

''ஆத்தா உன் சேலை
அந்த ஆகாயத்தைப் போல
தூளி கட்டி ஆட
தொட்டில் கட்டி ஆட
ஆத்துல மீன் புடிக்க
அப்பனுக்குத் தலை துவட்ட''

- என்று உயிரும் உணர்வும் கலந்து பாடும் கரிசல் குயில் கிருஷ்ணசாமியின் பாடலைக் கேட்டால், எந்தத் தாயும் மனம் நெகிழ்ந்து கண்ணீர்விட நேரும். இப்படி எண்ணற்ற ஏழைத்




தாய்மார்கள் மட்டுமல்லாது, ஏழைத் தொழிலாளர்களின் வாழ்க்கையிலும் இசையாய் கலந்துவிட்ட வாழ்வு கிருஷ்ணசாமியினுடையது. எப்படி வந்தார் இசைத் துறைக்கு? அவரே சொல்கிறார்.

''விருதுநகர் மாவட்டம் நரிக் குளம் கிராமம்தான் நான் பிறந்து வளர்ந்த பூமி. எட்டுப் பேர் என்னோட பிறந்தவங்க. அதுல எட்டாவது ஆள் நான். எங்க அப்பா கோயில்களில் பஜனைப் பாடல் பாடுறவர். ஆனால், எனக்கு அதில் பெரிய ஈடுபாடு வரலை. அவர் பாடுறதை மட்டும் காது கொடுத்துக் கேட்பேன். ஆனால், டி.எம். எஸ். பாடுன அத்தனை சினிமா பாட்டும் எனக்கு அத்துப்படி. இயல்பாவே நல்ல குரல் வளம் இருந்ததாலே, மெல்ல மெல்ல என்னோட பாட்டுத் திறமை எனக்குள்ள பால ஆரம்பிச்சுருந்த நேரம், நான் காலேஜ் முடிச்சுட்டு அஞ்சலகத் துறையில வேலைக்குச் சேர்ந்தேன். அங்கதான் எனக் குன்னு காத்திருந்திச்சு ஓர் உலகம்'' என்று தொடக்கி வைக்கிறார்.

''நான் நல்லா பாடுறதைக் கேள்விப்பட்டு தொழிற்சங்க நிகழ்ச்சிகள்ல பாட வைச்சாங்க. அப்பதான் எனக்கு, கே.ஜி. போஸ் நடத்துற நிஜ நாடகக்குழு அறிமுகமாச்சு. என்னோட மொத்த வாழ்க்கையும் மாத்தி அமைச்சதுல அந்தக் குழுவுக்கு நிறைய பங்கு உண்டு. டி.எம்.எஸ். பாட்டுப் பாடிக்கிட்டு இருந்த என்னை, பாரதியார் பாடல் பாட வைச்சது அந்தக் குழுதான். கவிஞர் பரிணாமன் கவிதைகளை மெட்டுப்போட்டு **'எட்டையபுரத்தானுக்கு இணையாக புலவரென, எங்காச்சும் பார்த்தியோ மாடத்தி'** பாடினேன். எனக்குப் பெரிய பெயரைப் பெற்றுத் தந்த பாட்டு அது'' என்கிறார்.

''1982ல் பேரா. கே.ஏ.குணசேகரன் மதுரை சாத்தியார் அணையில நாடகப் பயிற்சி முகாம் ஏற்பாடு செஞ்சிருந்தார். அந்த முகாமுக்கு எழுத்தாளர் ச.தமிழ்ச்செல்வன்தான் என்னை அழைச்சிக்கிட்டுப் போனார். அங்கு நான் எடுத்துக்கிட்ட பயிற்சிதான் எனக்கு அடங்காத ஆர்வத்தை இசைமேல உண்டு பண்ணியது'' என்னும் கிருஷ்ணசாமி, தற்போது விக்கிரசிங்கபுரம் போஸ்ட் மாஸ்டராகப் பணியாற்றுகிறார்.

''என்னால இப்பவரைக்கும் மறக்க முடியாத அனுபவம்னா அது



# கரிசல் குயில்!

குன்றக்குடி அடிகளாரோட பாராட்டுத்தான். அவர் த.மு.எ.ச. கலை இரவு மேடையில், நாட்டில் சுதந்திரம் எந்த அளவுக்குச் சீர்கெட்டுக் கிடக்கிறது என்பதையும், இன்றைய இளைஞர்கள் நிலைமையையும் வேதனையோடு பேசினார். அதற்குப் பிறகு அதே மேடையில்,

*'புதுயுக நாயகரே புரட்சிப்*
*பாரத தூதுவரே*
*வந்தே மாதரம் தாரக*
*மந்திரம்*
*மறுபடியும்*
*முழங்கிடுவோம்.'*

- என்று பாடினேன், என் பாட்டைக் கேட்டு உணர்ச்சி வசப்பட்ட அடிகளார், பொறுப்பான இளைஞர்கள் கையில்தான் பாரதம் இருக்குனு என்று எனக்கு சால்வை போர்த்தி நெகிழ்ந்து பாராட்டினார். ஒரு நாள் நாகப்பட்டினத்தில் கலை இரவு. நான் பாடிக்கொண்டிருக்கிறேன். பாடி முடித்தவுடன் மக்கள், வரிசையில் நின்று அன்பளிப்பு கொடுத்ததை மறக்க முடியாது'' என்கிறார்.

சரி, சினிமாவில் பாட ஆசையிருக்கா என்றால், ''இருக்கு; ஆனா என்னைவிட திறமைசாலிகள் வாய்ப்பு கிடைக்காம அலைஞ்சுக்கிட்டு இருக்காங்க. அதனால தான் என்னோட பாடலெல்லாம் உழைக்கும் மக்களுக்குன்னு முடிவு பண்ணிட்டேன்'' என்கிறார்.

*செய்திச் சித்திரம் :*
**கிராபியென் பிளாக்**

● கரிசல் குயில் கிருஷ்ணசாமி



• கூல் ஜெயந்த்

'ரிச் கேர்ள்ஸ்' என்ற பெயரைக் கேட்டாலே, துணை நடிகைகளுக்கு ஏகத்துக்கு முகம் சிவந்துவிடுகிறது. அப்படி என்ன கோபம் 'ரிச் கேர்ள்ஸ்' மேல் என்றால், விஷயம் இதுதான். ஒரு காலத்தில் கோடம்பாக்கத்தில் துணை நடிகைகளுக்கு எந்தப் போட்டியும் கிடையாது. சினிமா வட்டாரத்தில் எந்தப் பிரச்னை முளைத்தாலும், இவர்கள்தான் நிரந்தர நடன ஆர்ட்டிஸ்ட்கள். இப்போது அப்படி இல்லை. இவர்களுக்குப் போட்டியாக ரிச் கேர்ள்ஸ் என்ற பெயரில் வெளி மாநிலங்களிலிருந்தும், வெளிநாடுகளிலிருந்தும் நடிக்கவும், டான்ஸில் கலக்கவும் படித்த, ஹையர் மிடில் கிளாஸ் பெண்கள் க்யூ பிடிக்கத் தொடங்கியிருப்பதுதான். இவர்கள் பிழைப்பில் மண்ணை வாரிப் போட்டிருக்கிறது. இதுகுறித்து நாம் சென்னை துணை நடிகர்கள் சங்கத்தைச் சேர்ந்த சிலரிடம் பேசினோம். ''ஒரு காலத்துல இந்தத் துறைக்கு வரவே பலர் பயந்தாங்க. அவ்வளவு கேவலமாக நினைச்ச காலம் உண்டு. ஆனா, இப்போ எங்களுக்கு ஒரே போட்டி. எங்க சங்கத்துல இருக்கற ரொம்பப் பேருக்கு பிழைப்பு ஓடறதே பெரும் கஷ்டமாக இருக்கு. அதனால, சிலர் தப்பான வழிக்குப் போகவும் வாய்ப்பு இருக்குங்க'' என்று நம்மிடம் பொருமித் தள்ளினார்கள். ஃபோட்டோவெல்லாம் வேண்டாம் என்று முகம் காட்ட மறுத்துவிட்டார்கள்.

''நல்ல போஷாக்குடன் வளரும் பெண்கள். வசீகரிக்கும் அழகு. நல்ல நிறம். உயரம் என சில நேரங்களில் ஹீரோயினை மிஞ்சிடும் பேரழகு. இதில் மயங்கிய கோடம்பாக்கத்துக் காரர்கள், இவர்களுக்கே சினிமாவில் தற்போது முக்கியத்துவம் கொடுக்கத் தொடங்கியுள்ளார்கள்'' என்கிறார் உதவி இயக்குநர் ஒருவர்.

இதைப்பற்றி டான்ஸ் மாஸ்டர்



# துணை நடிகைகளைப்

கூல் ஜெயந்திடம் கேட்டோம்.

''இன்னைக்கு சினிமாத் துறை மற்ற துறைகளைவிட போட்டிமிக்க

துறை. இதுல ரிச் கேர்ள்ஸ் வருகை, சினிமாவைக் கொஞ்சம் கலர்ஃபுல்லாக மாற்றியிருக்கு. அதே நேரத்தில் மூன்று தலைமுறையாக சினிமாவில் துணை நடிகைகளாக வலம் வந்தவர்களின் நிலமை, இன்று கொஞ்சம் மோசமடைந்து இருக்கிறது. வாய்ப்புகள் அவர்களுக்குக் குறைந்து இருக் கிறது என்பதை மறுக்க முடியாது. ரிச் கேர்ள்ஸ் இப்போது சின்னத் திரைக்கும் வந்துவிட்டார்கள். இவர்கள் இப்படி நடிப்பதை பொழுதுபோக்காகவும் நினைக்கிறார்கள். ப்ரெண்ட்ஸ்களின் வேண்டுகோளுக்கிணங்கியும் சிலர் நடிக்கத் தொடங்கியுள்ளார்கள். இந்தியாவில் யார், எந்த மாநிலத்தில் போய் வேண்டுமானாலும் நடிக்கலாம் என்ற நல்ல நிலை இப்போது இருக்கிறது. இதனை இவர்கள் சாதகமாகப் பயன்படுத்துகிறார்கள். இந்த ரிச் கேர்ள்ஸ் முக்கால்வாசிப் பேர் மாடலிங் துறையில் பனிச்சிட்ட பெண்கள். எல்லா விஷயங்களையும் கற்றுக்கொண்டுதான் இங்கு வருகிறார்கள். சிலர் மட்டும் வேறு வேலை செய்து கொண்டு, பொழுதுபோக்குபோல பெரிய திரையில் முகம் காட்டுகிறார்கள். இந்த ரிச் கேர்ள்ஸுக்கு என்று நிறைய ஏஜென்ட்களும் முளைத்துள்ளார்கள். இவர்களுக்கு மொழி ஒரு பிரச்னையாக இருக்கிறது. ஆகவே இவர்களை வேலை வாங்குவது சற்று சிரமம்தான்'' என்றார் ஜெயந்த்.

இது குறித்து துணை நடிகை ஒருவரிடம் பேசினோம். ''எங்க குடும்பமே துணை நடிகை தொழிலில்தான் ஈடு பட்டிருக்கிறது. வேறு வேலைகள் செய்யவும் நாங்க முயற்சி செய்வதில்லை. இந்த நிலமையால், நாங்கள் வேறு துறைக்குச் செல்ல

# பதற வைக்கும் ரிச் கேர்ள்ஸ்!

வேண்டிய சூழ்நிலை ஏற் பட்டுள்ளது. எங்கள் சங்கம் ஓரளவுக்கு திரைத்துறை வேலையை உறுதி செய்து உதவுவ தால் பிழைப்பு ஓடுகிறது. இப்படி ரிச் கேர்ள்ஸ் வருகை எங்கள் பிழைப்பில் மண்ணை வாரிப் போடும் என்றால், நாங்கள் தெருவில் இறங்கிப் போராடுவோம்'' என்று பேச்சை முடித்துக்கொண்டார்.

ரிச் கேர்ள்ஸ் வருகையால் திரைப்படங்கள் வேண்டு மானால் 'ரிச்' ஆகலாம். ரசிக மனங்கள்...?!

– மாசி



# ஆட்டம் காணும்

**ச.ந. கண்ணன்**

சென்ற மார்ச் மாதம்தான் இந்திய அணி உலகிலுள்ள அத்தனை அவமானங்களையும் சந்தித்தது. மேற்கு இந்தியத் தீவில் நடைபெற்ற உலகக் கோப்பை முதல் ரவுண்டில், பங்களா தேஷிடமும் ஸ்ரீலங்காவிடமும்



தோற்றுப் போய் தலை கவிழ்ந்து இந்தியாவுக்குத் திரும்பினார்கள் வீரர்கள். உடனே பி.சி.சி.ஐ.க்கு எதிராக ஐ.சி.எல். என்கிற மாற்று அணி உருவானது. இந்திய கிரிக்கெட்டை இரண்டு துண்டாக்க எல்லா முயற்சிகளும் நடந்தன. இந்தச் சோதனையிலிருந்து இந்திய கிரிக்கெட் அணி மீளுமா என்கிற கேள்விகள் எழுந்தன.

சச்சின், கங்குலி, டிராவிட், ஜாகீர்கான் இல்லாத இந்திய அணி 20-20 உலகக் கோப்பைக்குச் சென்றபோது, எல்லோரும் ஓர் அலட்சியப் பார்வை பார்த்தார்கள். அண்ணன்களைப் போலவே தம்பிகளும் முதல் ரவுண்டிலேயே பின்வாங்குவார்கள் என்று எதிர்பார்க்கப்பட்டது. ஆனால், கண் முன் அத்தனை அதிசயங்களும் நடந்தேறின. எல்லோரையும் சீட்டின் நுனிக்குச் செல்லவைத்து கோப்பையைத் தட்டியது இந்திய அணி. அன்றிலிருந்து வெற்றிகள் தொடர்ந்தன. பெல்ஃபாஸ்டில் நடந்த தென் ஆப்பிரிக்காவுடனான ஒரு நாள் போட்டியை வென்றது இந்திய அணி. பிறகு இங்கிலாந்தில் நடைபெற்ற டெஸ்ட் தொடரைக் கைப்பற்றியது. சொந்த மண்ணில் பாகிஸ்தான் அணியை செத்த பாம்பை அடிப்பதுபோல அடித்தது. இந்தியாவில் நடைபெற்ற ஒருநாள் போட்டிகளிலும் ஆஸ்திரேலியாவில் நடந்த டெஸ்ட் தொடரிலும் இந்திய அணி தோல்வி கண்டாலும், தலைநிமிர்ந்து நிற்க முடிந்தது. ஆஸ்திரேலியாவை அவர்கள் சொந்த மண்ணில் மண்டியிட வைத்த பெருமை இந்தியாவுக்குக் கிடைத்தது. இந்திய அணியுடனான ஒவ்வொரு போட்டியிலும், தர்மசங்கடத்துக்கு ஆளானார் ரிக்கி பாண்டிங். கூடவே இப்போது U-19 உலகக் கோப்பை இந்திய அணி கையில்!

கங்குலிக்கு அடுத்ததாக ஆஸ்திரேலிய பாணிகளைப் பின்பற்றுபவராக இருக்கிறார் டோனி. விளையாட்டில் கங்குலி அவருக்கு ஓர் உதாரண புருஷர். ஆனால், கேப்டன் என்ற முறையில் பார்க்க, கங்குலி, அணிக்கு ஒரு சுமையாகத் தென்பட்டார். கூடவே டிராவிடும். உடனே இருவரையும் தயவு தாட்சண்யம் பார்க்காமல் நீக்கிவிட்டார் டோனி. பலனாக கம்பீர், ரோஹித் சர்மா, உத்தப்பா, பிரவீன் குமார் போன்ற வீரர்களுக்கு அதிக வாய்ப்புகள் வழங்கப்பட்டு, அதற்கான பலன்களும் அறுவடை செய்யப்பட்டன. மோசமாக ஆடுகிற எவருக்கும் இரக்கம் காட்டுவதில்லை டோனி. முன்னுதாரண





மாக தம்முடைய ஆட்டத்தையும் நன்கு மேம்படுத்திவிட்டார். முன்பு சிக்ஸர் அடிப்பதில் ஆர்வம் காட்டிக்கொண்டிருந்தவர், இப்போது ஒரு குடும்பத்தலை

# ஆஸ்திரேலியா!



வனுக்குரிய பொறுப்போடு தமது ஆட்ட உத்திகளையும் மாற்றிவிட்டார். ஆஸ்திரேலிய டூரின் மூலமாக இந்திய அணியின் மனோபாவம் மாறியிருக்கிறது. ஒரு ரன், இரண்டு ரன்கள் எடுப்பதில் இந்திய அணி அதிக அக்கறை காட்டிவருகிறது. மைக்கேல் க்ளார்க், சிமண்ட்ஸ் ஃபீல்டிங்கைப் பார்த்து, இந்திய அணி வீரர்களும் இப்போது பலமாக டைவ் அடிக்கத் தொடங்கியிருக்கிறார்கள். டோனி மீது ஆயிரம் விமர்சனங்கள் வந்தாலும் டோனி பால் மாறுவதில்லை. சில முடிவுகளில் பிடிவாதமாக இருக்கிறார். 'பேசுபவர்கள் பேசட்டும். அது அவர்களுடைய வேலை. நான் என் வேலையைப் பார்த்துக்கொள்கிறேன்.'



தொடர் வெற்றிகளால் மட்டுமே ஓர் அணியால் நம்பர் ஒன் அணியாக மாற முடியும் என்பதை, எண்பதுகளில் மேற்கு இந்தியத் தீவுகள் அணியும் அதற்கடுத்து ஆஸ்திரேலியாவும் நிருபித்துள்ளன. சமீபகாலமாக U-19 இந்திய அணியிடம் இதுபோன்ற நிரந்தர வெற்றிகளைக் காண முடிந்தது. டோனி அணியும் தொடர்ந்து ஜெயிக்க வேண்டிய கட்டாயத்துக்குத் தள்ளப்பட்டிருக்கிறது. தொடர்ந்து இயங்குபவர்களுக்கு மட்டும் தான் இவ்வுலகில் நீடித்த இடம் உண்டு. 2008 இறுதிக்குள் ஆஸ்திரேலியாவிடமிருந்து நாற்காலியைக் கைப்பற்றாவிட்டால், ஆஸ்திரேலிய மண்ணில் சிந்திய வியர்வைக்கும் பட்ட அவமானங்களுக்கும் அடைந்த வலிகளுக்கும் பலன் இல்லாமல் போய் விடும்.

கௌரிபுத்திரன்

# க்ளாஸுக்கு நேரமாச்சு!

கணவரை அலுவலகத்துக்கு அனுப்பி வைத்துவிட்டு உள்ளே வந்தாள் சாரதா. ரமா இன்னமும் 'க்ளாஸு'க்குக் கிளம்பியபாடில்லை.

"இன்னுமா நீ கிளம்பலே. மணி ஒன்பதாகப் போறது. நீ போய்ச் சேர்றதுக்குள்ளே 'க்ளாஸ்' ஆரம்பமாயிடும். சீக்கிரம் கிளம்பு!" எனத் துரிதப்படுத்தினாள் சாரதா.

'இதோ கிளம்பிட்டேன்!' என்று கூறியவாறே புத்தகங்கள், நோட்புக்குகள் அடுக்கிய பையைத் தோளில் மாட்டிக்கொண்டு கிளம்பிய ரமாவிடம், "எல்லாம் சரியா எடுத்து வைச்சிருக்கியா?" என்றாள் சாரதா.

"எடுத்து வைச்சிருக்கேன்."

"பேனா, பென்சில், நோட்புக்..."

"எல்லாம் சரியா இருக்கு"

"வாட்டர் பாட்டில்? வழக்கமா மறந்துடுவியே!"

"எல்லாம் எடுத்திண்டிருக்கேன்" என்று சொல்லிக்கொண்டே காலில் செருப்பை மாட்டிக்கொண்ட ரமாவிடம்

"பஸ்ஸிலே பார்த்து ஏறி இறங்கு. 'க்ளாஸ்' முடிஞ்சவுடனே வந்து சேரு. உன் 'ப்ரண்ட்ஸ்'களோட அரட்டை அடிக்கக்கிட்டு நிக்காதே!" என்றாள் சாரதா.

"சரி, சரி... நான் போய்ட்டு வர்றேன்" என்று கிளம்பிய ரமாவை வாசற்படி வரை சென்று வழியனுப்பிவிட்டு உள்ளே வந்த சாரதா, 'தினசரி இதே பாடாப் போச்சு! பாரின்ல இருக்கற பேத்தி, தன்னோட பிரசவ 'டைம்'க்கு ரமா பாட்டி வந்தாதான் ஆச்சுன்னு பிடிவாதம் பிடிக்கறதும் போதும்... 'நாலஞ்சு மாசம் அங்கே இருக்கணும். அடிப்படை 'ஃப்ரெஞ்ச்'கூட தெரியாம அங்கே எப்படிக் காலம் தள்றது'ன்னு, இந்த அறுபது வயசுலே அம்மா ஃப்ரெஞ்ச் க்ளாஸ்லே சேர்ந்திருக்கறதும் போதும்!' என அலுத்துக்கொண்டாள் சாரதா. ●



"வேற ஏதாவது பிரச்னை இருந்தா வரட்டுமா டாக்டர்?"



"வாங்க; பணப் பிரச்னை மட்டும் இல்லாதப்போ வாங்க..."

- சீர்காழி வி.ரேவதி



**இந்திய அரசியலமைப்பின் வளர்ச்சியும் விடுதலை இயக்க வரலாறும் - டாக்டர் ஜி.பாலன், டாக்டர் டி.கிட்டிணா மூர்த்தி, வானதி பதிப்பகம், 23, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை - 17. விலை ரூ.150**

1773 - 1950 ஆண்டுகளில் கொண்டு வரப்பட்ட சட்டங்கள் விதிமுறைகள், காந்திஜியின் அறப் போராட்டங்கள், மற்றும் பல அரிய விவரங்கள் அடங்கிய புத்தகம். மைய, மாநில அரசுகள் நடத்தும் போட்டித் தேர்வுகள் எழுதுவோருக்குத் தேவையான, பயனுள்ள பல செய்திகளைத் தொகுத்து வெளியிட்டுள்ளனர் நூலாசிரியர்கள்.




**தெருவோரப் பூக்கள் - மெய்யாத்தூர் ரா.வேல்முருகன், செண்பகம் பதிப்பகம், 13/1 ஏ, பார்சன் டெல்டா 'பி' பிளாக், மாம்பழச் சாலை, திருச்சி - 5. விலை ரூ.50**

தாய், தந்தை பாசம், சமூகக் கேடுகள், சாதாரண மக்களின் யதார்த்த உணர்வுகளை மரபுக் கவிதை, புதுக்கவிதைகளில் புதுமையாகப் புலப்படுத்தியுள்ளார். சமூக அக்கறையை

# கனல் மணக்கும் கவிப்பூக்கள்!

வெளிப்படுத்தும் இவரது கனல் மணக்கும் கவிப்பூக்கள், வித்தியாசமானவை!




**ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர் - பா.சு.ரமணன், விகடன் பிரசுரம், 757, அண்ணா சாலை, சென்னை-02. விலை ரூ.55**

ராமகிருஷ்ணரின் வாழ்க்கை வரலாற்று நிகழ்ச்சிகள், குட்டிக் கதைகளின் மூலமாக அவர் அருளிய உபதேசங்கள், அவரின் இறை தத்துவங்கள் கொண்ட நூல். ஆன்மிக அன்பர்களுக்கு ஆவலைத் தூண்டும் வகையில் சம்பவங்களைச் சுவைபட விவரித்துள்ளார் ரமணன்.



**அமுதகரபிகள் - ப.சந்திரகாந்தம், பி-5-6, பங்சாபுரி மவார், ஜலன் 2/48ஏ, பந்தர் பாரு செந்துல், 51000 கோலாலம்பூர். விலை RM 25.00**

2003-2005 ஆண்டுகளில் மலேசியாவில் வெளிவந்த தமிழ் நாவல்களில், சிறந்த நாவலாகத் தேர்வு பெற்று, பரிசு பெற்ற நாவல். மலாயா வரலாற்று நிகழ்வுகளின் பின்னணியில், உணர்ச்சியும் உருக்கமும் இழையோட உருவாக்கப்பட்டுள்ள நாவல். தனது எளிய கற்பனை நடையில், நாயகன் தயாபரன், அவன் சகோதரி மதுரா கதாபாத்திரங்களுடன் நம்மையும் உலவிடச் செய்கிறார் நூலாசிரியர்.

**– மித்ரா**

**புத்தக விமர்சனம்**

# ‘கல்கி’ வெறுத்த கல்வித் திட்டம்!

கல்கி ராஜேந்திரன்

மத்திய அரசின் விஞ்ஞான வளர்ச்சி அமைச்சகம், என்னுடைய பேத்தி கௌரிக்கு மேல் படிப்புக்கான உதவித் தொகையாக ரூ.20,000 வழங்கியிருக்கிறது. சி.பி.எஸ்.இ. இறுதிப் பரீட்சையில், ‘பயாலஜி’யில் முதல் மாணவியாக தேர்வு பெற்றதற்கும் ‘பயோடெக்னாலஜி’ துறையில் ஆர்வம் வளர்ப்பதற்கும் இந்தப் பரிசு. கௌரியைப் போலவே கல்கி அவர்களுடைய பேரன் - பேத்திகள், கொள்ளுப் பேரன் - பேத்திகள் பலரும், நன்றாகப் படித்து அயல் நாடுகளில் மேல் படிப்பைத் தொடர்ந்தார்கள். தொடர்கிறார்கள்.

‘கல்கி’ கிருஷ்ணமூர்த்தியும் படிப்பில் அசகாய சூராக இருந்தார். கணக்கில் நூற்றுக்கு நூற்றியிருபது மார்க் வாங்குவார்! எப்படியென்றால் 12 கணக்கு கொடுத்து 10 கணக்குகள் போடச் சொல்வார்கள். (சாய்ஸ்). கிருஷ்ணமூர்த்தி எல்லா கணக்குகளையும் குறிப்பிட்ட நேரத்துக்கு முன்னதாகவே போட்டு முடித்துவிடுவார்! ஆங்கிலத்தில் அவர் எழுதியிருந்தால் உலகப் பிரசித்தி பெற்ற எழுத்தாளராக விளங்கியிருப்பார். தாய்மொழிப் பற்றும் தேசபக்தியும் அவரைத் தமிழ் எழுத்தாளராக்கின. அதனால் இன்று மொழிபெயர்ப்பாளர்கள் உதவியைத் தான் அவருடைய எழுத்து நம்பியிருக்க வேண்டியுள்ளது. பள்ளி இறுதி வகுப்பில் அவரை ஆங்கில வியாசம் எழுதச் சொன்னபோது, ஷேக்ஸ்பியர் நாடகம் ஒன்றின் ஒரு காட்சியை வர்ணித்தார். அதைப் படித்த ஆங்கில ஆசிரியர், ஒரே ஒரு வார்த்தையை சிவப்பு பென்சிலால் அடிக்கோடிட்டார். அந்த வார்த்தையை விடச் சிறந்ததாக ஒரு சொல்லை கிருஷ்ணமூர்த்தி பயன்படுத்தியிருக்கலாம் என்று அவர் கருதியதால், அதற்காக 1/4 மார்க் குறைத்து 10க்கு 9 3/4 மதிப்பெண் தந்தார்!

தமிழகத்தின் அதிர்ஷ்டமோ அல்லது கிருஷ்ணமூர்த்தி படித்திருக்கக்கூடிய கல்லூரியின் துரதிர்ஷ்டமோ, எஸ்.எஸ்.எல்.ஸி. இறுதிப் பரீட்சை எழுதுமுன்னர் காந்திஜியின் அறைகூவலை ஏற்று, பள்ளியிலிருந்து வெளியேறி, சுதந்திரப் போராட்டக் களத்தில் குதித்துச் சிறை புகுந்துவிட்டார். அப்புறம் பல பள்ளிக்கூடங்கள், கல்லூரிகளுக்குப் பல்வேறு நிகழ்ச்சிகளுக்குத் தலைமை தாங்க அழைக்கப்பட்டுச் சென்றாரே தவிர, படித்து முன்னேறியதெல்லாம் புத்தகங்



களின் உதவியுடன் சுயமாகத்தான்.

**க**ல்வியில் அவ்வளவு கெட்டிக்காரராக இருந்த 'கல்கி'யின் மகனாகிய எனக்கு, படிப்பில் என்றைக்குமே தீவிர ஈடுபாடு இருந்ததில்லை. அப்பாவும் 'படி, படி' என்று என்னிடம் ஒரு தடவைகூட வற்புறுத்திக் கூறியதில்லை. இதற்கு ஒரு முக்கிய காரணம் 'கல்கி'மீது ரசிகமணி டி.கே.சி.க்கு இருந்த ஆளுமை. அவர், 'மெக்காலே' கல்வித் திட்டத்தை நம்மை அடிமைப்படுத்தி குமாஸ்தாக்களை உருவாக்க, ஆங்கிலேய அரசு கொண்டு வந்து திணித்த, கல்வித் திட்டமாகக் கருதினார். அதை உபயோகமற்றதாகத் தீர்மானித்து வெறுத்தார்.

என்னுடைய சகோதரன் (பெரியப்பா மகன்) ரமணிதான் எங்கள் குடும்பத்தில் முதல் பட்டதாரி. இதில் அவனுக்கு ரொம்பப் பெருமை. முதல் தடவையாக டி.கே.சி.யைச் சந்தித்தபோது, 'நான் ரமணி, பி.ஏ.' என்று தன்னைத்தானே அறிமுகப் படுத்திக்கொண்டான். ''அப்படியா!'' என்றார் டி.கே.சி. ஆச்சர்யமடைந்தவர் போல. ''தென்னை மரம் ஏறத் தெரியுமா உனக்கு?''

ரமணி ஒன்றும் புரியாமல் திருதிருவென்று விழித்தான்.



**'கல்கி' மீது ரசிகமணி டி.கே.சிக்கு இருந்த ஆளுமை, இந்த எதிர்ப்புக்கு ஒரு முக்கிய காரணம்...**

''தெரியுமா?'' என்று மறுபடியும் அழுத்தம் திருத்தமாகக் கேட்டார்.

''தெரியாது'' என்றான்.

''அப்படியானால் பி.ஏ. பட்டத்தினால் என்ன பயன்? அதைத் தலையைச் சுற்றி கடலில் எறிந்துவிடு!'' என்றார் ரசிகமணி.

ரமணிக்கு ஒன்றும் புரியவில்லை. டி.கே.சி. தலை மறைந்ததும், ''என்னடா இது, இந்த மனுஷன் இப்படிப் பேசறான்'' என்றான் என்னிடம்.

''அவருக்கு உன் பேரில் ஒன்றும் கோபமில்லை, அண்ணா! இப்போதுள்ள கல்வித் திட்டத்தின் மீதுதான் கோபம்'' என்று நான் அவனைச் சமாதானப்படுத்தினேன். (ரமணி சீக்கிரமே இந்தியன் வங்கியில் சேர்ந்து - குமாஸ்தாவாகத்தான்



படிப்படியாக உயர்ந்து தொழிற் சங்கவாதியாக மாறினான். அவன் அகால மரணமடைந்த போது ஏராளமான இந்தியன் வங்கி ஊழியர்கள் திரண்டு வந்து இறுதி அஞ்சலி செலுத்தினார்கள்.)

மெக்காலே கல்வித் திட்டத்தின் மீது 'கல்கி' அவர்களுக்கும் நம்பிக்கை இல்லை. என்னுடைய பாடப் புத்தகங்களையெல்லாம் நான் படித்தேனோ இல்லையோ, 'கல்கி' படித்தார்! இரவெல்லாம் கண் விழித்துப் படித்து, அந்தப் புத்தகங்களைக் கடுமையாகத் தாக்கி விமர்சித்து 'பெற்றோன்' என்ற புனைபெயரில் தமது பத்திரிகையில் பக்கம் பக்கமாகப் பல வாரங்கள் தொடர்ந்து எழுதினார். சுதந்திர இந்தியாவில் எத்தகைய கல்வித் திட்டம் அமைய வேண்டும் என்றும் எழுதினார். அவற்றையெல்லாம் நான் ஆர்வத்துடன் படித்து ரசித்தேனே தவிர, பாடப் புத்தகங்களைப் புதுக்கருக்கு குன்றாமல் வைத்திருந்தேன்! 'பெற்றோன்' எழுதிய அந்தக் கட்டுரைகளை இன்றைக்குப் படித்தாலும் சுவாரஸ்யமாக இருக்கும் (வானதி திருநாவுக்கரசு கவனிக்க!) என்பதோடு, நமது கல்வித் திட்டம் நாம் சுதந்திரம் அடைந்த பிறகும் அப்படியொன்றும் பிரமாதமாக மாறி விடவில்லை என்பதும் தெரியவரும். கல்வி என்பது தன்னம்பிக்கையையும் சுயச்சார்பையும் வளர்ப்பதாகவும் பல்வேறு பிரிவினை உணர்வுகளை நீக்குவதாகவும் உடலுழைப்பின் உயர்வை மதித்து ஏற்பதாகவும் தேச பக்தியை ஊட்டுவதாகவும் அமைய வேண்டும் என்பதே டி.கே.சி., 'கல்கி' ஆகியோரின் நோக்கமாக இருந்தது.

'படி, படி' என்று வற்புறுத்துபவர் யாரும் இல்லாததால், சகோதரர் ஆனந்திக்கும் எனக்கும் பள்ளிக்கூடம் போய் வருவது ஒரு ஜாலியான அனுபவமாகவே இருந்தது. சேத்துப்பட்டில் கல்கி காரியாலயம் அருகிலேயே நாங்கள் குடியிருந்தபோது, தொடக்கத்தில் 'குட் ஷெப்பர்ட் கான்வென்'டில்தான் சேர்க்கப்பட்டோம். அங்கு கல்வி போதித்த கன்னிகாஸ்திரிகளை 'மதர்' என்று அழைப்போம். ஒரு சமயம் ஒரு கவிதையை மனப்பாடம் செய்துவந்து மறுநாள் ஒப்பிக்கவேண்டும் என்று மதர் சுசிலா உத்தரவிட்டார். நான் வழக்கம்போல விளையாட்டில் இறங்கி, படிக்காமலிருந்து

**என்னுடைய பாடப் புத்தகங்களையெல்லாம் நான் படித்தேனோ இல்லையோ, 'கல்கி' படித்தார்! இரவெல்லாம் கண் விழித்துப் படித்து, அந்தப் புத்தகங்களைக் கடுமையாக விமர்சித்தார்.**

விட்டு, இரவு திடீரென்று நினைவு வர, அழ ஆரம்பித்துவிட்டேன். அப்போதுதான் வீடு திரும்பிய அப்பா, ''என்ன, என்ன?'' என்று கனிவுடன் கேட்டார். விஷயம் தெரிய வந்ததும், ''இவ்வளவுதானே, வா, நான் சொல்லித் தரேன்'' என்று ஊஞ்சலில் என்னை அருகிலேயே உட்கார வைத்துக் கொண்டார். பாட்டை ஒரு நோட்டம் விட்டார். ''அடடா! ரொம்ப அழகான பாட்டா இருக்கே'' என்று ஆர்வத்தை வளர்த்தார். ''பாட்டைவிட படம் இன்னும் அழகா இருக்கு, பாரு'' என்று ரசிக்கச் செய்தார். எட்டே வரிகள்தான் அந்தப் பாட்டு:

Baby blew a bubble,
Softly let it fall.



Like a rainbow fairy
In a silver ball!

"Pretty little bubble,
Will you not stop and play?"
But the bubble bubbled bubbled
And the bubble flew away!

பாடலை, அப்பா உணர்ச்சியோடும் ஒரு தாள கதியிலும் வாசித்தார். தமிழில் பாவ பூர்வமாக விளக்கினார். "நீ கூட குளிக்கும்போது, உள்ளங்கையில் சோப்பு குழைத்து ஊதி பப்பிள் விடுவாயே" என்று நினைவூட்டினார். பிறகு, ஆங்கிலக் கவி



● மெக்காலே கல்வித் திட்டத்திலிருந்து 'தப்பிய' கல்கி, டி.கே.சி., சதாசிவம் வீட்டுக் குழந்தைகள்!

வரிகளின் இறுதியில் rhyme என்ற மோனை போன்ற வார்த்தைகள் கட்டாயம் இருக்கும் என்று சொல்லி, அவற்றை எடுத்துக்காட்டினார். இதை நினைவில் கொண்டால் வெகு சுலபமாக மனனம் செய்துவிடலாம் என்று வழி காட்டினார். இரண்டு தடவை படித்ததும் மனப்பாடமாகிவிட்டது. 66 வருஷங்களாகியும் இன்னும் மறக்கவில்லை. எப்படி மறக்கும்? 'கல்கி' கற்றுத் தந்ததாயிற்றே. தொடர்ந்து கற்றுத்தர அவருக்கு நேரமில்லை. எனக்கு அதிர்ஷ்டமில்லை.

**நா**லைந்து ஆண்டுகளுக்குப் பிறகு, 'ஆங்கில மீடியத்தில் படித்தது போதும், தமிழில் படிக்க வேண்டும்' என்று கருதி, சகோதரி ஆனந்தியையும் என்னையும் முறையே லேடி எம்.ஸி.டி. முத்தையா செட்டியார், ஸர் எம்.ஸி.டி. முத்தையா செட்டியார் உயர்நிலைப் பள்ளிகளில் அப்பா சேர்த்துவிட்டார். மீடியம் மாறியதே தவிர, அசிரத்தையில் மாற்றமில்லை! வருஷா வருஷம் எப்படியோ சுமாரான மதிப்பெண்கள் பெற்று மேல் வகுப்புக்குச் சென்றுவிடுவோம். அவ்வளவுதான்! ஓர் அரை ஆண்டு பரீட்சையில் அந்த சுமாரான மதிப்பெண்ணுக்கும் குறைவாகப் போய் விட்டது எனக்கு! அப்பா 'பிராக்ரஸ் ரிப்போர்ட்'டை ஒரு நோட்டம் விட்டார். "பேஷ் பேஷ்! சக்கைப் போடா இருக்கே!" என்றார். தாம் கையெழுத்திட வேண்டிய இடத்தில், 'Grand' என்று எழுதி, பிறகு கையெழுத் திட்டார்.

**அ**ந்த Grand என்ற வார்த்தை கேலி செய்தது, மெக்காலே கல்வித் திட்டத்தையா? அல்லது எனக்குப் பாடம் சொல்லித் தந்த ஆசிரியர்களையா? அல்லது குறைவாக மதிப்பெண் பெற்ற என்னையா? அல்லது முத்தாப்பையுமா? என்பது 'கல்கி'க்கும் கடவுளுக்கும் மட்டுமே வெளிச்சம்.

ஆனால், வகுப்பாசிரியர் எஸ்.கே. ராமச்சந்திரன், அப்பா என்னைத்தான் கிண்டல் செய்திருப்பதாகத் தீர்மானமாக நம்பினார். நான் வகுப்பில் ஏதாவது ஒரு கேள்விக்குச் சரியாக பதில் சொல்லி விட்டாலும் சரி, பதில் தெரியாமல் திருதிருவென்று விழித்தாலும் சரி, மூக்கின் மேல் விரல் வைத்து, 'Grand' என்று நீட்டி முழக்குவார் வகுப்பறையில் எல்லோரும் கொல்லென்று சிரிப்பார்கள். நானும் கூடத்தான்!

**(பேசலாம்)**

**மேஷம் :** வருவாய் மிகுதி ஆகும். கல்வி வளம் நன்றாக இருக்கும். மகப்பேறு பாக்கியம் உண்டாகும். உத்தியோகத்தில் உயர்வு ஏற்படும். இடமாற்றம் ஏற்படும். கொடுக்கல், வாங்கல் சிக்கல் தீரும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. தொழிலில் நல்ல அபிவிருத்தி ஏற்படும். ராகு / சனி / கேது வழிபாடு செய்து வர, நற்பலன் உண்டாகும்.

**ரிஷபம் :** டென்ஷன் குறையும். அவசரப்பட்டு வேலை மாற்றம் செய்ய வேண்டாம். வேலைப்பளு அதிகரிக்கும். பண வருவாய் சற்றுத் தாமதம் ஆகும். திருமணத் தடை விலகும். கல்வியில் முன்னேற்றம் ஏற்படும். உடல்நிலையில் கவனம் தேவை. கடல் கடந்த மனிதர்களால் நற்பலன் ஏற்படும். ராகு / கேது / சனி / குரு வழிபாடு செய்து வர, நற்பலன்கள் கிட்டும்.

**மிதுனம் :** சுப நிகழ்ச்சி கைகூடும். வீடு /மனை வாங்க உகந்த நேரம். படிப்பில் முன்னேற்றம் ஏற்படும். தொழில் துறை வருவாய் அதிகரிக்கும். பண வசதிகள் பெருகும். உடல்நிலை நன்றாக இருக்கும். புண்ணிய ஸ்தலம் செல்வீர்கள். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். அயல்நாட்டு மனிதர்கள் மூலம் நல்ல தகவல் வந்து சேரும். பரிகாரம் தேவை இல்லை.

**கடகம் :** கல்வியில் அக்கறை தேவை. சகாக்கள் நட்பிலிருந்து விலகி இருப்பது நல்லது. கணவன் - மனைவி ஒருவருக்கொருவர் அனுசரித்துப் போவது நல்லது. வாக்கிங் போகும்போது எச்சரிக்கை தேவை. உத்தியோகத்தில் வேலைப் பளு அதிகரிக்கும். வழக்குச் சற்று தாமதம் ஆகும். வாகனங்களில் செல்லும்போது உஷார். ராகு / கேது /

# நடக்குமென்பாரி ;



குரு / சனி வழிபாடு செய்து வருதல் நலம் தரும்.

**சிம்மம்** : பொருளாதாரச் சிரமம் தீரும். கல்வி வளம் சிறப்படையும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். வெளியூரில் உள்ள நண்பர்களால் அனுகூலம் ஏற்படும். வியாபாரத்தில் நல்ல அபிவிருத்தி உண்டாகும். தடை நீங்கி, திருமணம் கைகூடும். உடல் ஆரோக்கியம் சீராகும். ராகு / கேது / சனி வழிபாடு, செய்து வர நற்பலன் உண்டாகும்.

**துலாம்** : சுப காரியம் கைகூடும். பூர்வீகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். நெருங்கிய கூட்டாளிகள் விலகிச் செல்வார்கள். புதிய தொழில் துவங்க ஏற்ற காலம். வீடு / மனை வாங்க நல்ல தருணம். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். தொழில் ஸ்தானத்தில் நல்ல அபிவிருத்தி உண்டாகும். கல்வியில் முன்னேற்றம் ஏற்படும். வழக்கு வெற்றி பெறும். ராகு / கேது / குரு வழிபாடு செய்து வர, நற்பலன் உண்டாகும்.

# நடக்கும்!

## 09.03.08 முதல் 16.03.08 வரை

**விருச்சிகம்** : வாக்கு வன்மை மேலோங்கும். பண வசதி பெருகும். ஆடை, ஆபரணப் பொருட்கள் சேரும். நண்பர் உறவினர்களிடம் அனுகூலம் ஏற்படும். படிப்பில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். உடல்நிலை பாதிக்காது. வழக்கு, வியாபாரம் வெற்றி பெறும். உத்தியோகத்தில் நற்பெயர் ஏற்படும். இடமாற்றம் உண்டாகும். ராகு / கேது / சனி வழிபாடு செய்து வர, நற்பலன் உண்டாகும்.

**தனுசு** : பணத் தட்டுப்பாடு வராது. சுப நிகழ்ச்சிகள் கைகூடும். மனத்தில் இருந்துவந்த பயம் விலகும். வேலையில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். நண்பர்கள் ஒத்தாசை கிட்டும். புண்ணியஸ் தலம் செல்ல நேரிடும். குரு வழிபாடு செய்து வர, நற்பலன் உண்டாகும்.

**மகரம்** : யாரிடமும் வாக்குவாதம் வேண்டாம். குடும்ப வாழ்வில் விட்டு கொடுத்துப் போவது நல்லது. கைப் பொருள்மீது கவனம் தேவை. யாருக்கும் ஜாமீன் போடக் கூடாது. படிப்பில் அதிக அக்கறை செலுத்தவும். உடல்நிலையில் கவனம் தேவை. வேலையில் பளு அதிகரிக்கும். ராகு / கேது / குரு / சனி வழிபாடு செய்து வர, நற்பலன் உண்டாகும்.

**கும்பம்** : எண்ணங்கள் யாவும் ஈடேறும். சொத்துகள் சேரும். இல்லற வாழ்வில் அனுசரணை தேவை. வராத நிலுவைகள் வந்து சேரும். வேலையில் நற்பெயர் ஏற்படும். புதிய வேலை வாய்ப்பு தேடி வரும். எதிர்ப்புகள் விலகும். கல்வி வளம் நன்றாக இருக்கும். குழப்பம் விலகும். ராகு / கேது / சனி வழிபாடு செய்து வர நற்பலன் உண்டாகும்.

**மீனம்** : யோகமான வாரம். மனசஞ்சலம் தீரும். வெளியூர் மனிதர்களால் அனுகூலம் ஏற்படும். பணக் கஷ்டம் இருக்காது. கல்வியில் முன்னேற்றம் ஏற்படும். நண்பர் உறவினர்களால் ஆதாயம் ஏற்படும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். செலவுகள் சுபமானதாக இருக்கும். தூர தேச அழைப்பு வந்து சேரும். சனிக்கிழமைதோறும் வழிபாடு செய்து வர நற்பலன் உண்டாகும்.

தஞ்சை பரத்வாஜ்

## 24. பொன்னன் பிரிவு

பொன்னன் அந்த அதல பாதாள மான அருவிக் குளத்தில் இறங்கிய அதே சமயத்தில், சிவனடியார் அருவியின் தாரைக்குப் பின்னாலிருந்து வெளிப்பட் டார். பொன்னனுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சி யைச் சொல்லி முடியாது. அவன் மேலே போகலாமா, வேண்டாமா என்று தயங்கி நின்றபோது, சிவனடியார் அவனைப் பார்த்து ஏதோ கூறியதுடன் சமிக்ஞையி னால் ''வா'' என்று அழைத்தார். அருவி யின் பேரோசையினால் அவர் சொன்னது என்னவென்று பொன்னன் காதில் விழ வில்லை. ஆனால், சமிக்ஞை புரிந்தது. முன்னால் சுவாமியார் போன மாதிரியே இவனும் குளத்தின் ஓரமாகப் பாறை களைப் பிடித்துக்கொண்டு தட்டுத் தடு மாறிச் சென்று, அவர் நின்ற இடத்தை அடைந்தான். தூரத்தில் நின்று பார்த்த போது குறுகலாகத் தோன்றிய அருவியின் தாரை, உண்மையில் முப்பது அடிக்குமேல் அகலமுள்ளது என்பதை பொன்னன் இப்போது கண்டான். சுவாமியார் அவனு டைய கையைப் பிடித்துப் பாறைச் சுவருக் கும் அருவியின் தாரைக்கும் நடுவில் இருந்த இடைவெளியில் அழைத்துச் சென்றார். இந்த இடைவெளி சுமார் ஐந்து அடி அகலமுள்ளதாயிருந்தது. மிகவும் மங்கலான வெளிச்சம்; கீழே பாறை வழுக் கல்; கொஞ்சம் கால் தவறினால் அருவியின் தாரையில் அகப்பட்டுக் கொண்டு, அந்தப் பாதாளக் குளத்துக்குள் போக வேண்டி யதுதான்! ஆகவே, இரண்டு பேரும் நிதானமாகக் காலை ஊன்றி வைத்து நடந்தார் கள். நாலைந்து அடி நடந்ததும் சிவனடியார் நின்று பாறைச் சுவரில் ஓரிடத்தைச் சுட்டிக் காட்டினார். அங்கே கிட்டத்தட்ட வட்ட வடிமாக ஒரு பெரிய துவாரம் தெரிந்தது. அந்தத் துவாரம் சாய்வாக மேல் நோக்கிச் செல்வதாகத் தெரிந்தது. ஓர் ஆள் அதில் கஷ்டமில்லாமல் புகுந்து செல்லலா மென்று தோன்றியது. ஆனால், அந்தத் துவாரம் எங்கே போகிறது? எவ்வளவு தூரம் போகிறது? ஒன்றும் தெரியவில்லை. ஐந்தாறு அடிக்கு மேல் ஒரே இருட்டாக யிருந்தது.

சிவனடியார் பொன்னனுக்குச் சைகை காட்டி தன்னைப் பின் தொடர்ந்து வரும் படி சொல்லிவிட்டு, அந்தத் துவார வழி யில் ஏறத் தொடங்கினார். சாய்வான மலைப் பாறையில் ஏறுவதுபோல கைகளையும் கால்களையும் உபயோகப் படுத்தி ஏறினார். பொன்னனும் அவரைத் தொடர்ந்து ஏறினான். இன்னதென்று தெரியாத பயத்தினால் அவனுடைய நெஞ்சு பட், பட் என்று அடித்துக்கொண் டது. சற்று ஏறியதும் ஒரே காரிருளாயிருந்த படியால் அவனுடைய பீதி அதிகமாயிற்று. ஆனால், கையினால் பிடித்துக்கொள்ளவும், காலை ஊன்றிக் கொள்ளவும் சௌகரிய மாக அங்கங்கே பாறை வெட்டப்பட்டி ருப்பதாகத் தெரிந்தபோது, கொஞ்சம் தைரியம் உண்டாயிற்று. இவ்விதம் சிறிது நேரம் சென்ற பிறகு, அந்தக் குகை வழியில் மேலேயிருந்து கொஞ்சம் வெளிச்சம் தெரிய ஆரம்பித்தது. பிறகு வெளிச்சம் நன்றாய்த் தெரிந்தது. சிவனடியார் மேலே ஏறி அப்பால் நகர்ந்தார். பொன்னனும் அவரைத் தொடர்ந்து ஏறி அடுத்த நிமிஷம் வெட்ட வெளியில் மலைப்பாறை மீது நின்றான். சுற்றுமுற்றும் பார்த்தான். ஆகா, அது என்ன அற்புதக் காட்சி!

மலை அருவி விழுந்த செங்குத்தான

# அமரர் கல்கி

பாறையின் விளிம்பின் அருகில் அவர்கள் நின்றார்கள். அங்கே பாறையில் கிணறு மாதிரி வட்ட வடிவமாக ஒரு பள்ளம் இருந்தது. அந்தப் பள்ளத்தின் நடு மத்தியில்தான் குகை வழி ஆரம்பமாகிக் கீழே சென்றது. பள்ளத்துக்கு இடது புறத்தில் கொஞ்சம் தூரத்தில் அருவி, 'சோ' என்று அலறிக்கொண்டு கீழே விழுந்தது. அருவி விழுந்த திசைக்கு எதிர்ப்புறமாகப் பார்த்தால், கண் கொள்ளாக் காட்சியாயிருந்தது. மூன்று பக்கமும் சுவர் வைத்தாற் போன்ற மலைத் தொடர்கள். நடுவில் விஸ்தாரமான சமவெளி. அந்தச் சமவெளியில் கண்ணுக்கெட்டிய தூரம் மஞ்சள் மலர்களால் மூடப்பட்ட, காட்டுக் கொன்றை மரங்கள். எங்கே பார்த்தாலும் பூ! பொன்னிறப் பூ!

''பார்த்தாயா, பொன்னா! எப்பேர்ப்பட்ட அருமையான இடம்! இந்த இடத்தைக் கொண்டு போய்க் கடவுள் எவ்வளவு இரகசியமான இடத்தில் ஒளித்து வைத்திருக்கிறார் பார்த்தாயா?'' என்றார் சிவனடியார்.

''ஆமாம், சுவாமி! எங்கள் பார்த்திப மகாராஜாவின் சித்திர மண்டபத்தைப் போல!'' என்றான் பொன்னன்.

சிவனடியார் குறுநகை புரிந்தார்.

''ஆனால், பொன்னா! பகவான் இவ்வளவு அழகைச் சேர்த்து ஒளித்து வைத்திருக்கும் இந்த இடத்தில், மகா பயங்கரமான

# கனவு

கோர கிருத்யங்கள் எல்லாம் நடக்கின்றன.''

''ஐயோ, சுவாமி! ஏன் அவ்விதம் சொல்கிறீர்கள்?''

''ஆமாம். வெகு நாளாய் நான் அறிய விரும்பியதை இப்போது அறிந்தேன். மகா கபால பைரவரின் இருப்பிடம் இந்த மலை சூழ்ந்த பள்ளத்தாக்கில்தான் எங்கேயோ இருக்கிறது. அதைக் கண்டுபிடித்து விட்டுத்தான் நான் இங்கிருந்து திரும்பி வருவேன். நீ...''

''நானும்தான், சுவாமி! உங்களைத் தனியே விட்டுவிட்டு நான் போய் விடுவேன் என்று நினைத்தீர்களா?''

''இல்லை பொன்னா! நீ போக வேண்டும். உனக்கு வேறு காரியம் இருக்கிறது. மிகவும் முக்கியமான காரியம்...''

''எங்கள் ராணியைக் கண்டு பிடிப்பதைக் காட்டிலும் முக்கியமான காரியம் என்ன சுவாமி?''

''அதற்குத்தானே நான் வந்திருக்கிறேன் பொன்னா! ஆனால், ராணியைக் காப்பாற்றினால் மட்டும் போதுமா? 'என் பிள்ளை எங்கே?' என்று அவர் கேட்டால் என்ன பதில் சொல்வது? இளவரசரும் இப்போது பெரிய அபாயத்தில்தான் இருக்கிறார். மாரப்பனுக்கும் மகா கபால பைரவருக்கும் நடந்த சம்பாஷணையை ஞாபகப்படுத்திக்



கொள். மாரப்பனுக்கு ஒரு வேளை தெரிந்துபோனால், அவன் என்ன செய்வானோ?''

''சக்கரவர்த்தித் திருக்குமாரியின் இஷ்டத்துக்கு விரோதமாய் என்ன நடந்துவிடும் சுவாமி?''

''ஏன் நடக்காது? தேவியின் சகோதரன் மகேந்திரன்கூட உறையூரில் இல்லை பொன்னா! மாரப்பன் இப்போது சக்கரவர்த்தி பதவிக்கல்லவா ஆசை கொண்டிருக்கிறான்? அவன் என்ன வேண்டுமானாலும் செய்வான். மேலும், குந்தவியே ஒரு வேளை அவரைச் சோழநாட்டு இளவரசர் என்று தெரிந்து கொண்டு, மாரப்பனிடம் ஒப்படைத்து விடலாமல்லவா...?''

''ஐயோ!''

''அதனால்தான் நீ உடனே உறையூருக்குப் போகவேண்டும்''

''ஆனால், உங்களை விட்டுவிட்டு எப்படிப் போவேன்? ஆ! அந்த மகா கபால பைரவர் உங்களைப் பலிக்குக் கொண்டு வரும்படி சொன்னதன் அர்த்தம், இப்போது தான் தெரிகிறது.''

''என்னைப் பற்றிக் கவலை வேண்டாம் பொன்னா! என் வாழ்நாளில் இதைப் போல எத்தனையோ அபாயங்களுக்கு ஆளாகியிருக்கிறேன். அந்தக் கபால பைரவனை நேருக்கு நேர் நான் தனியாகப் பார்க்கத்தான் விரும்புகிறேன். அவனைப் பற்றி நான் கொண்ட சந்தேகத்தை ருசுப்படுத்திக் கொள்ள விரும்புகிறேன்...!''

''என்ன சந்தேகம் சுவாமி?''

''சமயம் வரும்போது உனக்குச் சொல்வேன் பொன்னா! இப்போது நீ உடனே வந்த வழியாகத் திரும்பிச் செல்ல வேண்டும். நேரே உறையூருக்குப் போக வேண்டும். இளவரசரைப் பற்றிச் சந்தேகம் தோன்றாமலிருந்தால், அவர் அங்கேயே இருக்கட்டும். ஏதாவது அபாயம் ஏற்படும் என்று தோன்றினால், அவரை ஜாக்கிரதையாக நீ அழைத்துக்கொண்டு மாமல்லபுரத்துக்கருகில் என்னை நீ சந்தித்த சிற்ப மண்டபத்துக்கு வந்து சேர வேண்டும். அங்கே வந்து உங்களை நான் சந்திக்கிறேன்!''

''தாங்கள் வராவிட்டால்...?''

''அடுத்த பௌர்ணமி வரையில் பார். அதற்குள் நான் உறையூரிலாவது மாமல்லபுரத்துச் சிற்ப மண்டபத்திலாவது வந்து உங்களைச் சந்திக்காவிட்டால், நீ என்னைத் தேடிக்கொண்டு வரலாம்''

''அப்படியே சுவாமி!'' என்று சொல்லிப் பொன்னன் சிவனடியாரிடம் பிரியாவிடை பெற்று, அந்தத் துவாரத்துக்குள் இறங்கிச் சென்றான். கீழே வந்து அருவிக் குளத்தைத் தாண்டிக் கரையேறியதும் மேலே ஏறிட்டுப் பார்த்தான். அருவிப் பாறையின் விளிம்பில்



சிவனடியார் நின்று பார்த்துக் கொண்டிருப்பது தெரிந்தது. பொன்னன் அவரை நோக்கிக் கைகூப்பி நமஸ்கரிக்க, அவரும் கையை நீட்டி ஆசீர்வதித்தார். பிறகு பொன்னன் விரைவாக அருவி வழியில் கீழே இறங்கிச் செல்லலுற்றான்.

## 25. வள்ளி சொன்ன சேதி

**வ**ழியில் எவ்வித அபாயமும் இன்றி பொன்னன் உறையூர் போய்ச் சேர்ந்தான். முதலில் தன் அத்தை வீட்டில் விட்டு வந்த வள்ளியைப் பார்க்கச் சென்றான். வள்ளி இப்பொழுது பழைய குதூகல இயல்புள்ள வள்ளியாயில்லை. ரொம்பவும் துக்கத்தில் அடிபட்டு உள்ளமும் உடலும் குன்றிப் போயிருந்தாள். அவள் பக்தியும் மரியாதையும் வைத்திருந்த சோழ ராஜ குடும்பத்துக்கு ஒன்றன் பின் ஒன்றாய் நேர்ந்த விபத்துக்களெல்லாம் ஒரு புறமிருக்க, இப்போது கொஞ்ச நாளாய் பொன்னனையும் பிரிந்திருக்க நேர்ந்தபடியினால் அவள் அடியோடு உற்சாகம் இழந்திருந்தாள். எனவே பல தினங்களுக்குப் பிறகு பொன்னனைப் பார்த்ததும் அவளுடைய முகம் சிறிது மலர்ந்தது.

''வா! வா!'' என்று சொல்லி அவனுடைய இரண்டு கைகளையும் பிடித்துக் கொண்டு. ''இளவரசர் போனது போல் நீயும் எங்கே கப்பல் ஏறிப் போய் விட்டாயோ, அல்லது ஒருவேளை உன்னை யாராவது காளிக்குத்தான் பலி கொடுத்து விட்டார்களோ என்று பயந்து போனேன். தினம் காளியம்மன் கோயிலுக்குப் போய், 'என் உயிரை எடுத்துக் கொண்டு என் புருஷனைக் காப்பாற்று' என்று வேண்டிக் கொண்டிருந்தேன். நல்ல வேளையாய் வந்தாயே! என்ன சேதி கொண்டு வந்திருக்கிறாய்? நல்ல சேதி தானே?'' என்று மூச்சுவிடாமல் பேசினாள்.

''நல்ல சேதி, கெட்ட சேதி, கலப்படமான சேதி எல்லாம் கொண்டு வந்திருக்கிறேன். ஆனால், இப்போது சொல்ல முடியாது. பசி, பிராணன் போகிறது வள்ளி! உன் கையால் கம்பு அடை தின்று எவ்வளவு காலம் ஆகிவிட்டது! அகப்பட்ட போது அகப்பட்டதைத் தின்று...''

''அப்படியெல்லாம் பட்டினி கிடந்ததினால்தான் இன்னும் ஒரு சுற்று அதிகமாய்ப் பெருத்து விட்டாயாக்கும். பாவம்! கவலை ஒரு பக்கம்; நீ என்ன செய்வாய்?'' என்று பொன்னனை ஏற இறங்கப் பார்த்தாள்.

''அப்படியா சமாசாரம்? நான் பெருத்திருக்கிறேனா, என்ன? ஆனாலும் நீ ரொம்பவும் இளைத்திருக்கிறாய் வள்ளி! ரொம்பக் கவலைப்பட்டாயா, எனக்காக?'' என்றான் பொன்னன்.

''ஆமாம் ஆனால், என்னத்துக்காகக் கவலைப்பட்டோம் என்று இப்போது தோன்றுகிறது. அதெல்லாம் அப்புறம் ஆகட்டும். நீ போய்விட்டு வந்த சேதியை முதலில் சொல்லு. சொன்னால் நானும் ஒரு முக்கியமான சேதி வைத்திருக்கிறேன்'' என்றான்.

''சுருக்கமாகச் சொல்லுகிறேன். நமது விக்கிரம மகாராஜா தாய்நாட்டுக்குத் திரும்பி வந்திருக்கிறார்...''

> ''என்னைப் பற்றிக் கவலை வேண்டாம் பொன்னா. என் வாழ்நாளில் இதைப் போல எத்தனையோ அபாயங்களுக்கு ஆளாகியிருக்கிறேன்'' என்றார் சிவனடியார்.



''உங்க மனைவிக்கு என்ன பிரச்னைங்க?''

''மணி என்னன்னு கேட்டா ஆனந்தம், கோலங்கள்னு அந்த நேரத்துல டெலிகாஸ்ட் ஆகற மெகா சீரியல்கள் பெயரைச் சொல்றா, டாக்டர்!''

- எம்.வெங்கடேஷ்

''என்ன? என்ன? நிஜமாகத்தானா?'' என்று சொல்லி ஆவலுடன் கேட்டாள்.

''ஆமாம்; நானே இந்தக் கண்களால் பார்த்துப் பேசினேன்...''

''இப்போது எங்கேயிருக்கிறார்...?''

''அதுதான் சொல்ல மாட்டேன், இரகசியம்''

''சரி, அப்புறம் சொல்லு''

''ராணி உள்ள இடத்தைக் கிட்டத்தட்ட கண்டுபிடித்தாகி விட்டது. இப்போது சிவனடியார் ராணியைத் தேடிக் கொண்டிருக்கிறார். இதற்குள் அவசியம் கண்டுபிடித்திருப்பார்''

''ஆகா! சிவனடியாரா?''

''வள்ளி! நீ பொல்லாத கள்ளி! சிவனடியார் யார் என்று என்னிடம் உண்மையைச் சொல்லாமல் ஏமாற்றினாயல்லவா? அவருடைய பொய் ஜடையைப் பிய்த்து எறிந்து, அவர் யார் என்பதைக் கண்டு பிடித்துவிட்டேன்!''

''நிஜமாகவா? யார் அவர்?'' என்றாள் வள்ளி.

''யாரா? வேறு யார்? செத்துப் போனானே உன் பாட்டன் வீரபத்திர ஆச்சாரி, அவன்தான்!''

வள்ளி புன்னகையுடன், ''இப்படியெல்லாம் சொன்னால் போதாது. நீ இங்கேயிருந்து கிளம்பினாயோ, அதிலிருந்து ஒவ்வொன்றாய்ச் சொல்லு. ஒன்று விடாமல் சொல்ல வேண்டும்'' என்றாள்.

''நீ அடுப்பை மூட்டு'' என்றான் பொன்னன்.

**வ**ள்ளி அடுப்பை மூட்டிச் சமையல் வேலையைப் பார்த்துக்கொண்டிருக்கும் போதே பொன்னன் தான் போய் வந்த வரலாற்றையெல்லாம் விவரமாகக் கூறினான். கடைசியில், ''நீ என்னமோ சேதி சொல்லப் போகிறேன் என்றாயே, அதைச் சொல்லு!'' என்றான்.

வள்ளி சொன்னாள்: ''நாலு நாளைக்குள் மாரப்பன் இங்கே ஐந்து தடவை வந்து விட்டான். அவன்தான் இப்போது சோழ நாட்டின் சேனாபதியாம். அவனுடைய ஜம்பம் பொறுக்க முடியவில்லை. 'வசந்த மாளிகையில் யாரோ ஓர் இரத்தின வியாபாரி வந்திருக்கிறானாமே? அவன் செண்பகத் தீவிலிருந்து வந்தவனாமே?' என்று என்னவெல்லாமோ கேட்டு என் வாயைப் பிடுங்கப் பார்த்தான். எனக்கு ஒன்றுமே தெரியாது என்று சாதித்து விட்டேன். அப்புறம் இங்கே அடிக்கடி வந்து, நீ திரும்பி வந்து விட்டாயா என்று விசாரித்து விட்டுப் போனான். இன்றைக்கும் கூட ஒரு வேளை வந்தாலும் வருவான்''

இதைக் கேட்ட பொன்னன் சிந்தனையில் ஆழ்ந்தான். பிறகு, ''வள்ளி! தாமதிப்பதற்கு நேரமில்லை. இன்று சாயங்காலமே நான் வசந்தத் தீவுக்குப் போக வேண்டும். நம்முடைய குடிசையைப் பூட்டி

வைத்திருக்கிறாயல்லவா? குடிசையில் படகு ஜாக்கிரதையாயிருக்கிறதல்லவா?'' என்று கேட்டான்.

''இருக்கிறது. ஆனால், என்ன காரணத்தைச் சொல்லிக்கொண்டு தீவுக்குப் போவாய்?'' என்றாள்.

''குந்தவி தேவி இங்கே வந்தால் நான் படகு செலுத்த வேண்டும் என்று முன்னமே சக்கரவர்த்தி தெரிவித்திருக்கிறார். அதற்காகக் கேட்டுப் போக வந்தேனென்று சொல்கிறேன்.''

''ஆனால், சாமியார் இன்னும் எதற்காக இம்மாதிரி சங்கடங்களை எல்லாம் உண்டாக்கிக் கொண்டிருக்கிறார் என்றுதான் தெரியவில்லை. அவருடைய வேஷம் எப்போது நீங்குமோ?''

''நானும் இதையேதான் கேட்டேன். பார்த்திப மகாராஜாவுக்குக் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றுவதற்காகத்தான் இன்னமும் வேஷம் போடுவதாகச் சொல்கிறார்''

பிறகு பொன்னனும் வள்ளியும் சீக்கிரத்திலேயே சாப்பாட்டை முடித்துக் கொண்டு, உறையூரிலிருந்து புறப்பட்டு, காவேரி நதிப் பாதையில் சென்றார்கள். அவர்களுடைய குடிசையை அடைந்ததும், கதவைத் திறந்து, உள்ளே இருந்த படகை இரண்டு பேருமாகத் தூக்கிக்கொண்டு போய் நதியில் போட்டார்கள். பொன்னன், ''பொழுது சாய்வதற்குள் திரும்பி வந்து விடுவேன் வள்ளி, கவலைப்படாதே'' என்று சொல்லிவிட்டுப் படகைச் செலுத்தினான்.

பல தினங்களுக்குப் பிறகு மறுபடியும் காவேரியில் படகு விட்டது பொன்னனுக்கு மிகுந்த உற்சாகத்தை அளித்தது. ஆனாலும், பார்த்திப மகாராஜாவின் காலத்தில் இராஜ குடும்பத்துக்குப் படகு செலுத்தியது இப்போது நினைவுக்கு வந்தது. 'தீவிலே இளவரசரைப் பார்ப்போமா? அவருக்கு உடம்பு சௌகரியமாகி இருக்குமா? அவரைத் தனியாகப் பார்த்துப் பேச முடியுமா?' இவ்விதச் சிந்தனைகளில் ஆழ்ந்தவனாய்ப் படகு விட்டுக் கொண்டே போனவன், திடீரென்று கரைக்கு அருகே வந்துவிட்டதைக் கவனித்தான். படகு வந்த இடம் தீவின் ஒரு மூலை. ஜனசஞ்சாரம் இல்லாத இடம். அந்த இடத்தில் படகைக் கட்டிவிட்டுத் தீவுக்குள் ஜாக்கிரதையாகப் போய் புலன் விசாரிப்பதென்று அவன் தீர்மானித்திருந்தான்.

மறுதடவை அவன் தீவின் கரைப்பக்கம் பார்த்தபோது அவனுடைய கண்களை நம்ப முடியவில்லை. அங்கே விக்கிரம மகாராஜாவே நின்றுகொண்டிருந்தார். ஒரு கால் தண்ணீரிலும் ஒரு கால் கரையிலுமாக நின்று, படகையும் பொன்னனையும் ஆவலுடன் நோக்கிக்கொண்டிருந்தார்.

**(தொடரும்)**

''மாமியாரும் மருமகளும் ஒற்றுமையா மெகா தொடர் பார்க்கறாங்களே!''

''நடுவில் விளம்பரங்கள் போடும் போது சண்டை போட்டுக்குவாங்க!''

- க.ரவீந்திரன்





# நெஞ்சத்தைக் கிள்ளாதே!

ஹீரோயினுக்குக் காதல் வரும்போது, காதல் வரலைன்னு ஹீரோயின் காதலை ஹீரோ ஏற்றுக்கொள்ள மறுப்பதும், ஹீரோவுக்குக் காதல் வரும்போது அந்தக் காதலை ஹீரோயின் ஏற்றுக்கொள்ள மறுப்பதும் தான் கதை. திரைக்கதையில கொஞ்சம் தொய்வு இருந்தாலும், ஒவ்வொரு சீனும் இன்டிரஸ்டிங்கா இருக்கறதுனால திரைக்கதை ஓட்டத்துக்குக் கூடுதல் பலமா இருக்கு. பார்க்கற இடத்துல எல்லாம் ஹீரோவைத் தப்பா புரிஞ்சுக்கறதும், நல்லவன்னு தெரிஞ்சதுக்கு அப்புறமா ஹீரோ விக்ராந்திடம் காதலைச் சொல்ற விதத்துல, ஹீரோயின் பாரதியோட நேர்த்தியான நடிப்பு நெஞ்சை நெகிழ வைக்குது.

மணிவண்ணனின் மறைமுக வாழ்க்கை, அதன் மூலம் பிறந்த குழந்தைகள் எதுவுமே சரண்யாவுக்குத் தெரியலைன்னு சொல்றது நம்ப முடியலை. அது கதைக்குத் தேவையான்னு யோசிக்க வைக்குது. தவிர்த்திருக்கலாம்.

தங்கச்சியோட காதலை ஹீரோ புரிஞ்சுகிட்டு சப்போர்ட் பண்றது, 'நிறம்' மணியோட காதல் அப்ரோச், மனசை உருக வைக்குது. விக்ரமாதித்யா என்ற நல்ல நடிகரை வீணடித்திருக்கிறார்கள்.

தலைவாசல் விஜய், நிழல்கள் ரவி, பிரகதி, அலெக்ஸ்னு நடிகர் பட்டாளமே நடிச்சிருந்தாலும் எல்லோரும் அவங்கவங்க கதாபாத்திரத்துக்கு ஏற்ப நடிச்சிருக்காங்க.

ஹீரோ விக்ராந்த் காதலை ஹீரோயின் பாரதி புரிஞ்சுக்காம, செகண்ட் ஹீரோ விக்ரமாதித்யாவைத் திருமணம் செய்ய நினைப்பது யதார்த்தம். ஆனா, உண்மையான காதலனா இருக்கணுமுன்னு ஹீரோயின் பாரதிக்கு, விக்ரமாதித்யாவை ஹீரோ விக்ராந்த் திருமணம் செய்து வைப்பது காதலர்களுக்கு ஏமாற்றம்.

பிரேம் ஜி அமரனோட இசை செவிகளுக்குத் தாலாட்டு. கதை, திரைக்கதை, வசனம், பாடல் எழுதி இயக்கியிருக்கார் அகத்தியன். ஆபாசமில்லா காதல் படத்தை, குடும்பத்துடன் பார்க்க வைத்திருக்கிறார் இயக்குனர் அகத்தியன். 'நெஞ்சத்தைக் கிள்ளாதே' காதலர்களுக்குச் சமர்ப்பணம்.

- முத்து

# உலர்ந்து போகும் நிலம்!

**வசந்த பாரதி**

வேடர்களிடம் தப்பிய
புறாக்கள்
நவீனத்தின்
வலைப் பின்னல்களில்
சிக்கி
மரணிப்பது குறித்து
வருத்தமில்லை எவருக்கும்

வயல்களில் பொறுக்க
தானியங்கள் இன்றி
கருகி வீழ்கின்றன
பறவைச் சிறகுகள்

கண்டங்கத்திரியும்
வெண்டைக்காயும்
மிளகாய் வற்றலும்
மீன்கருவாடும்
கண்டைக்காயும்கூட

குளிப்பதனை
அங்காடிகளுக்குக்
கூண்டோடு இடம்பெயர
வற்றியே போயின
வாரச் சந்தைகள்

பிசைந்து உருட்டிய
அம்மா கைக் கவளமாய்
வார்த்தைகளைக் கட்ட
விதவிதமாய் முயல்கிறேன்
சிதறிப்போயின உறவுகள்

அலைபேசிக் கோபுரங்கள்
அங்கங்கே விண்முட்ட
கலகலப்பாய்க் காதல்மொழி
கதைபேசிக் களித்திருந்த
குருவிகளைக்
காணவில்லை
கண்டுதேட ஆளுமில்லை

எப்போதினி காண்போம்?
அப்பா, அம்மாவுடன்
தம்பி, தங்கையுடன் -
அந்த
ஒப்பற்ற கண்ணைப்பத்
தம்பிரானின்
கடைக் கூத்தை?

# அருள்வாக்கு

# வரமா... சாபமா..?

மிருகங்களின் உலகில் காலேஜ் இல்லை; லைப்ரரி இல்லை. அவற்றுக்கு வாக்குக் கிடையாது. ஆனால், இவையெல்லாம் இல்லாததால் அவை மனிதனை விடக் கஷ்ட நிலையில் இருக்கின்றனவா? அப்படித் தோன்றவில்லை. ஏதோ ஒரு விதத்தில் வாழ்ந்து பிழைத்துப் போகின்றன. ஒன்றை யொன்று அடித்துச் சாப்பிட்டாலும், எல்லா விலங்கு இனங்களும் விருத்தியாகிக் கொண்டே இருக்கின்றன.

மனிதப் பிரபஞ்சத்துக்கே வந்தாலும் கூட காலேஜும், லைப்ரரியும், இல்லாத ஆதிவாசிகளைப் பார்த்தால், அவர்கள் நம்மைவிட நிம்மதியாகவும் நல்லவர்களாகவும் இருப்பதாகவே தெரிகிறது. அதாவது எழுத்தறிவற்ற காட்டுக் குடிகள், நாகரிகமடைந்த நம் போல் இவ்வளவு குற்றம் செய்வதில்லை. நாகரிகமும், அதிக புத்தியும் படைத்த நாம் செய்யத்தகாத செயல்களில் - அகாரியங்களில் - நூதன கற்பனையுடன் விருத்தியடைந்துகொண்டே வருகிறோம். நாகரிகத்தினால் எத்தனைக்கெத்தனை செல்வத்தைப் பெருக்கிக்கொண்டோமோ, அத்தனைக்கத்தனை அநவரதமும் அதிருப்திப்படும் மனோபாவமும் பெருகியிருக்கிறது. படிப்பு முறை, பத்திரிகைகள், புஸ்தகங்கள் எல்லாம் மனிதனுக்கு நிம்மதியும், நிறைவும் தருவதற்குப் பதில், அதனை அதிருப்தியிலும் அகாரியத்திலும் கொண்டு விடுவதாகவே உள்ளன. மனிதனுக்கு மட்டும் 'ஸ்பெஷலா'க ஸ்வாமி தந்திருக்கும் வாக்குச் சக்தி அநுக்கிரகமா, சாபமா என்றே புரியவில்லை.



இதை யோசித்துப் பார்க்கும் போது, ஏன் வாயில்லாத மிருக ஜன்மா தாழ்வானது; மனித ஜன்மா உயர்வானது என்று சொல்லி வந்திருக்கிறார்கள் என்று தோன்றுகிறது.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்**

சுஜாதா

13



# ஓர் எழுத்து!

## வாரம் ஒரு பாசுரம்

## பாகம் - 2

திருமால் கண்ணனாக அவதரித்து சிறுபிள்ளையாக இருந்தபோது, வெண்ணெய் உண்டதற்காக வாய் திறக்கச் சொல்லிய யசோதைக்கு, அதில் உலகங்கள் அனைத்தையும் காட்டினதாக ஒரு கதை உண்டு. இந்தச் சம்பவத்தை ஆழ்வார்கள் பாடியிருக்கிறார்கள். திருமங்கையாழ்வார் பாடியதைப் பார்க்குமுன், அனைத்து உலகங்களையும் ஒரு வயிற்றில் அடக்கிவிடும் தத்துவம் நவீன இயற்பியல் தத்துவத்துக்குப் பொருத்தமாக இருப்பதை அறிவியலாளர்கள் கவனித்திருப்பதைச் சொல்ல வேண்டும். மிகச் சிறியதும் மிகப் பெரியதும் ஒன்றே என்னும் தத்துவம் வைணவத்தில் அடிக்கடி குறிப்பிடப்படுகிறது. ஆத்மா என்பது, ஒரு நெல்லின் வாலை நூறு பங்காக்கினால் அதில் ஒரு பங்கு அளவுள்ளது என்கிறார்கள். 'அணுவைச் சத கூறிட்ட கோண்' என்கிறார் கம்பர். அதிலும் கடவுள் இருக்கிறார் என்பதே கருத்து.

*'பார் ஏழு, கடல் ஏழு மலை*
*ஏழும் ஆய்,*
*சீர் கெழும் இவ்வுலகு ஏழும் எல்லாம்*
*ஆர் கெழு வயிற்றினில் அடக்கி*
*நின்று அங்கு*
*ஓர் எழுத்து ஓர் உரு ஆனவனே!*
*ஆண்டாய்! உனைக் காண்பது ஓர்*
*அருள் எனக்கு அருளுதியேல்,*
*வேண்டேன், மனை வாழ்க்கையை*
*- விண்ணகர் மேயவனே.'*

பெரிய திருமொழியின் ஆறாம் பாகத்தில் உள்ளது இந்தப் பாசுரம்.

'ஏழு உலகங்கள், ஏழு கடல்கள், மலைகள் இவை எல்லாவற்றையும் ஆபரணமணிந்த (ஆர்கெழு) ஒரு வயிற்றில் அடக்கி நின்று ஓர் எழுத்து ஓர் உரு ஆனவனே!' என்கிறார். ஓர் எழுத்து என்பது எல்லா எழுத்துகளுக்கும் முதன்மையான அகரம். வள்ளுவர் சொல்வதுபோல் 'அகர முதல எழுத்தெல்லாம் ஆதிபகவன் முதற்றே உலகு'. அண்ட சராசரங்களையும் ஓர் எழுத்தில் ஓர் உருவத்தில் அடக்கி விட்டவன் நாராயணன்.

க்வாண்டம் இயற்பியல், பிரபஞ்சம் அனைத்தையும் ஒரு சக்தி, ஒரு துகள் இரண்டிலும் அடக்கிவிடலாம் என்கிற முடிவுக்கு சென்ற நூற்றாண்டில்தான் வந்திருக்கிறது.

(படிக்கலாம்)



'போக்கிரிராஜா' படத்தில் வில்லனாக நடித்த நவரசத்திலகம் முத்துராமன், எதிர்பாராத விதமாக மரணமடைந்துவிட்ட நிலையில், அவர் சம்பந்தப்பட்ட காட்சிகளில் டப்பிங் பேச வேண்டுமே? என்ன செய்வது என்ற சிக்கல் எழுந்தது. அதை மிகவும் விசித்திரமான விதத்தில் சமாளித்தோம். ஒரு டப்பிங் கலைஞரை, வாயில் கூழாங்கற்களைப் போட்டுக்கொண்டு டப்பிங் பேசவைத்தபோது, அவரது குரல் முத்துராமனின் குரலுடன் சரியாகப் பொருந்தியது.

மான மனிதர் போலத் தோற்றமளிப்பார். அமைதியாகப் பேசியே செட்டைக் கலகலப்பாக்கிவிடுவார். அவரிடம் இன்னொரு குறிப்பிடத்தக்க பழக்கம் உண்டு. பொதுவாக யாருமே ஒரு ஜோக் சொன்னால், அதைக் கேட்டு மற்றவர்கள் அனைவரும் சிரிக்கும்போது, தாங்களும் கூடச் சேர்ந்து சிரிப்பார்கள். ஆனால், முத்துராமனோ, தம் ஜோக் மூலமாக எல்லோரையும் சிரிக்கச் செய்வாரே தவிர, தாம் சிரிக்கமாட்டார். 'ஊமைக்குசும்பு' அதிகம்!

'போக்கிரிராஜா' படத்தை வெளியிடுவதற்கு முன்பாக, ஒரு டிரெய்லர் தயாரித்து, தியேட்டர்களில் திரையிடுவதற்கு ஏற்பாடு செய்தோம். திரையில் முத்துராமன் தோன்றியவுடன், ரசிகர்கள் அவரது திடீர் மரணம் காரணமாக

# மேடையில் பேச பயந்த ரஜினி!

இங்கே, என் இனிய நண்பர்கள் ஜெய்சங்கர், முத்துராமன் பற்றியும் சொல்ல விரும்புகிறேன். அவர்கள் இருவருமே, என்னைத் தங்கள் குடும்பத்தில் ஒருவராகவே நினைத்தார்கள். ஜெய்சங்கர், எப்போதுமே கலகலப்பான மனிதர். அவர் ஷூட்டிங் ஸ்பாட்டில் இருந்தால் அனைவரையும் கேலியும் கிண்டலும் செய்து, கமெண்ட் அடித்துப் பேசி, ஒரு ஜாலியான சூழ்நிலையை ஏற்படுத்திவிடுவார். ஆனால், முத்துராமன், மிகவும் சாந்த

ஏற்பட்ட அனுதாபத்தில் த்சு.. த்சு என்று பரிதாபப்பட்டதைக் கவனித்தோம். வில்லன் ரோல் மீது அனுதாபம் வரலாமா? அதற்காக அவர் நடித்த சில காட்சிகளை டிரிம் செய்து, அங்கே ஒய்.ஜி.மகேந்திரன், மனோரமா சம்பந்தப்பட்ட நகைச்சுவைக் காட்சிகளைச் சேர்த்தோம்.

நான் முதன்முதலாக இயக்கிய 'கனிமுத்துப் பாப்பா' படத்தில் குழந்தை நட்சத்திரமாக நடித்தார் ஸ்ரீதேவி. 'தெய்வக்குழந்தை' என்ற படத்தின் முக்கிய கதாபாத்திரமும் குழந்தை ஸ்ரீதேவிதான். அந்தச் சிறு வயதிலேயே, தமது நடிப்பாற்றலைக் காட்டிவிருந்தார். பின்னர், நான் இயக்கிய படங்களில் கதா



நாயகியாகவும் நடித்தார். அவரது வளர்ச்சிக்குப் பின்னால், அவருடைய அம்மா இராஜேஸ்வரி இருந்தார்கள். ஒரு நடிகையின் பலமும் பலவீனமும் அவருடைய அம்மாதான். ஸ்ரீதேவியைப் பொறுத்தவரை, அம்மா, அவருடைய பலம். அகில இந்திய நட்சத்திரமாக அவர் ஜொலித்தாலும், என்றும் அவர் எங்களுடைய குழந்தைதான்.







# எஸ்.பி.முத்துராமன்

'போக்கிரி ராஜா' படத்தில், ரௌடிகளான ரஜினி, ராதிகா இணைந்து பாடும் ஒரு டூயட் பாட்டு உண்டு. 'போக்கிரிக்குப் போக்கிரி ராஜா...' என்ற அந்தப் பாடலை கரடுமுரடான தரை கொண்ட மலைப் பிரதேசம் ஒன்றில் படமாக்கினோம். ரஜினி, ராதிகா இருவரது கேரக்டர்களுக்கும் ஏற்ப, டான்ஸ் மாஸ்டர் புலியூர் சரோஜா படு ஸ்பீடான, சற்று முரட்டுத்தனமான மூவ்மென்ட்களை



அமைத்திருந்தார். ஒரு சமயம், ராதிகாவை, அப்படியே தூக்கிக் கொண்டு ரஜினி ஆட வேண்டும். எனவே, ரஜினியிடம் கரடு முரடான இந்த லொகேஷனுக்குப் பதிலாக வேறு சௌகரியமான இடத்தில் படம் பிடித்துக் கொள்ளலாம் என்றபோது, ''இல்லை, இங்கேயே ஷூட் பண்ணலாம்'' என்று சொல்லி விட்டார். 'அப்படியென்றால், டான்ஸ் மூவ்மென்ட்களையாவது கொஞ்சம் சுலபமாக மாற்றி அமைத்துக்கொள்ளலாம்' என்று சொன்னபோது, ''இந்தப் பாடலுக்கு, டான்ஸ் இப்படித்தான் வேகமா இருக்கணும்'' என்று சொல்லிவிட்டார். பலன்? அந்தப் பாட்டும், ஆட்டமும் சூப்பர் ஹிட்! அது மட்டுமா? 'போக்கிரி ராஜா' நூறு நாட்கள் ஓடி ஒரு வெற்றிப் படமாக அமைந்தது.

படத்தின் வெற்றி விழாவில் ரஜினி பேசவேண்டும் என்று சரவணன் சார் விரும்பினார். அதை ரஜினியிடம் தெரிவித்த போது, ''ஐயோ! எனக்குப் பேச





# ரசிகர் மன்ற ராஜாக்கள்

சென்னை, பாடியைச் சேர்ந்த சங்கர் ஒரு ஆட்டோ டிரைவர். சொந்த ஊர் திருவாரூர் மாவட்டத்தில் தாழைக்குடி. ரஜினியின் 'பாட்ஷா' படத்தைப் பார்த்துவிட்டு தீவிர ரசிகர் ஆன இவர், கடந்த வருடம் கொளத்தூரிலிருந்து கோயம்பேட்டுக்கு ஒரு குடும்பத்தை சவாரி அழைத்து வந்திருக்கிறார். சவாரி முடித்து வீடு திரும்பியதும் ஆட்டோவில் ஒரு 'பேக்' இருந்திருக்கிறது. அதனைப் பிரித்துப் பார்க்க 55 சவரன் தங்க நகைகளும், இரண்டாயிரம் ரூபாய் பணமும், சில சான்றிதழ்களும் இருந்திருக்கின்றன. பையை மறந்து வைத்தவரின் சொந்த ஊர் முகவரியும் இருக்க, உடனே அந்த 55 சவரன் நகைகளையும் ரொக்கத்தையும் தவறவிட்டவரிடமே திரும்பக் கொடுத்தார் சங்கர்.

''ரஜினி ரசிகனாக இருந்துகொண்டு நேர்மையாக இல்லாவிட்டால் என்ன நியாயம்?'' என்று கேட்கிறார். ''ரஜினி அரசியலுக்கு வந்துதான் நல்லது செய்ய வேண்டும் என்பது இல்லை. அவர் நடிக்கும் ஒவ்வொரு காட்சியிலும், என்னைப் போன்ற ரசிகர்கள் சில நல்ல விஷயங்களைக் கற்றிருக்கிறோம்'' என்கிறார் சங்கர்.

வராதே!'' என்று மறுத்தார். ''அதனால் என்ன? நீங்கள் என்ன பேச வேண்டுமோ என்னிடம் சொல்லுங்கள்! நான் அதை அப்படியே எழுதிக் கொடுத்துவிடுகிறேன். நீங்கள் அதைப் பேசிவிடுங்கள்'' என்று நான் சொன்னேன். அதன்படியே ரஜினி பேச வேண்டியதை எழுதியும் கொடுத்துவிட்டேன். அதை ரஜினி பல முறை படித்துக்கொண்டார். மேடையில் எப்படிப் பேசுவது என்று ஒத்திகைகூடப் பார்த்தார். அவரைப் பேச அழைத்தபோது, கையில் பேப்பருடன் மைக் முன்னே வந்தார். பேப்பரைப் பார்த்தபடி பேச்சை ஆரம்பித்த ரஜினி, சிறிது நேரத்தில் அந்தப் பேப்பரை மடித்துப் பாக்கெட்டில் போட்டுக்கொண்டு, தொடர்ந்து சரளமாகப் பேசலானார். மேடையில் பேசப் பயந்த ரஜினி, இவ்வளவு தெளிவாகவும் சரளமாகவும் பேசுகிறாரே என்று நாங்கள் அனைவரும் மிகவும் ஆச்சரியப்பட்டுப் போனோம். இன்று ரஜினி பேசும்போது, கதைகள் என்ன! தத்துவங்கள் என்ன! பஞ்ச் வசனங்கள் என்ன! தூள் கிளப்புகிறார்! அவர் பேசினா உலகமே அதிருதில்ல!

தம் பேச்சின்போது, ''சரவணன் சார் கட்டாயப்படுத்தி சொன்னதன் பேரில்தான் நான் இந்தப் படத்தில் நடிக்க ஒப்புக் கொண்டேன். 'படம் பார்ப்பவர்களின் ரசனை அவருக்கு மிகவும் நன்றாகத் தெரிந்திருக்கிறது. இனிமேல் சரவணன் சார் எந்தக் கதையைச் சொன்னாலும், மறுப்பு சொல்லாமல் நடிக்க ஒப்புக்கொள்வது என்று நான் முடிவு எடுத்திருக்கிறேன்'' என்று வெளிப்படையாகப் பேசினார்.





தமிழ்த் திரையுலகில் திருப்புமுனை ஏற்படுத்திய ஒரு மூத்த இயக்குனர், சொந்தமாக ஒரு திரைப்படத் தயாரிப்பு நிறுவனம் ஆரம்பித்தபோது, முதல் படத்தை இயக்கும் வாய்ப்பை எனக்குக் கொடுத்தார். அந்த இயக்குனர்? படம்...? அடுத்த வாரம்.

**(பயணம் தொடரும்)**

*எழுத்து வடிவம் :*

**எஸ்.சந்திரமௌலி**

# நாரதரின் லேப்டாப்!



''மெகா சீரியல் பார்த்துப் பார்த்து ஒரே முதுகு வலி டாக்டர்.''

''டி.வி.யைக் கொண்டு வாங்க. எல்லா டெஸ்ட்டும் பண்ணிப் பார்த்துடுவோம்!''

- பம்மல் நாகராஜன்



''அந்த நாடகத்திலே அப்படி என்ன புதுமை?''

''நாரதர், கழுத்திலே தம்பூராவுக்குப் பதிலா லேப்டாப் மாட்டிக் கிட்டு முக்காலத்தையும் பார்த்துச் சொல்றார்!''

- க.ரவீந்திரன்

''டாக்டர், ஒரு சந்தேகம்.''

''எதுவா இருந்தாலும் கேளுங்க.''

''நீங்க எழுதற பிரிஸ்கிரிப்ஷன் மாதிரி இல்லாம, பில் மட்டும் தெளிவா இருக்கே ஏன்?''

- சீர்காழி எஸ்.புவனா



''டாக்டர், ரொம்ப நேரமா கிட்னியைத்தானே தேடிக்கிட்டிருக்கீங்க.''

''ஆமாங்க.''

''நீங்க இப்படிப் பண்ணுவீங்கன்னு தெரிஞ்சு தான் அதை வீட்டில் பத்திரமா வெச்சுட்டேன்.''

- வே.முருகேசன்








# தம்பதி நம்பர்-1



"ஒவ்வோர் ஆணின் வெற்றிக்குப் பின்னாடியும் ஒரு பெண் இருப்பாள்னு சொல்வாங்க. ஆனால் என் மனைவி ப்ரீதா என் பக்கத்திலேயே இருந்து, உழைத்து வெற்றியை வாங்கித் தந்துள்ளார்" என்று பெருமை பொங்கப் பேசுகிறார் ராகவ். கலைஞர் டி.வி.யின் 'மானாட மயிலாட' நிகழ்ச்சியில் இரண்டாவது இடத்தைப் பிடித்த சிறந்த ஜோடி ராகவ் - ப்ரீதா.

சின்னத்திரை ரசிகர்களால் பெரிதும் விரும்பிப் பார்க்கப்பட்ட 'மானாட மயிலாட' நடன நிகழ்ச்சியின் இறுதிச் சுற்றில் கலந்துகொண்ட நான்கு ஜோடிகளில், ராகவ் - ப்ரீதா மட்டுமே நிஜ வாழ்விலும் ஜோடி!

"எங்களை ரசிகர்களும் நடன நிகழ்ச்சியின் நடுவர்களும் சிறந்த ஜோடியாகத் தேர்ந்தெடுத்தது, பயங்கர த்ரில்லிங்கான அனுபவம்.

என் மனைவி அதிக நம்பிக்கை தந்தாள். எனக்கு நடனம் பற்றி சில ரகசியங்களையும் சொன்னாள். அடிப்படையில் எனக்கு நடனத்தைப் பற்றிய எந்த அனுபவமும் அறிவும் கிடையாது. திரைப்படம் ஒன்றில் நடிப்பதற்காக நான்கு மாதங்கள் மட்டும் நடனம் கற்றுக்கொண்டேன். இந்தப் பயிற்சி ஓரளவு கைகொடுத்தது.

நடனப் போட்டிகளில் நடனம் மட்டுமே ஆடிவிட்டுப் போகாமல், இடையிடையே சில காமெடி மூவ்மென்ட்களையும் செய் வேன்.

ஒரு சேனல் நிகழ்ச்சியில் காம்பயரிங் செய்யும்போது ப்ரீதாவை சந்தித்தேன். எனது சிந்தனையும் அவரது சிந்தனையும் ஒத்துப்போக, எங்களுக்குள் நட்பு அரும்பியது. அரும்பிய நட்பு காதலாக மாறியது. எனது தந்தை மருத்துவர். அவரது தந்தை இன்ஜினியர். காதலைப் புரிந்துகொள்ளும் பெற்றோர்களாக இருந்ததால், எங்களுக்குப் பிரச்னை இருக்கவில்லை" என்கிறார் ராகவ்.

ப்ரீதா 'விப்ரோ'வில் பணியாற்றுகிறார். பணிக்குச் செல்லும் நேரம் போக, மீதி நேரங்களில்தான் தொலைக் காட்சி தொடர்களிலும் இதுபோன்ற நிகழ்ச்சிகளிலும் பங்கேற்கிறார்.

"என்கிட்ட கேள்வி கேட்க மாட்டீங்களா?" என்றபடியே ப்ரீதா பேச ஆரம்பிக்கிறார். "எங்களுக்கு முதல் பரிசு கிடைக்கலையே என்று எனக்குள் சின்ன

வருத்தம் உண்டு. அந்த அளவுக்கு நாங்கள் உழைத்திருக்கிறோம்.

இந்த இரண்டாவது இடம் என்னால் தான் கிடைத்தது என்று ராகவ் சொன்னால் கூட... இது முழுவதுமே அவருடைய கனவுதான். அந்தக் கனவுக்கு நான் வடிவம் கொடுத்திருக்கிறேன், அவ்வளவுதான்.

எனக்குத் தெரியாத விஷயங்களை அவரும், அவருக்குத் தெரியாததை நானும் பகிர்ந்துகொள்வோம். இருவரும் ஈகோ இல்லாமல் ஒருவரையொருவர் புரிந்து கொள்வோம்'' என்றார் சிறிதும் புன்னகை மாறாமல்.

இவர்களுக்கு தனிஷா என்ற இரண்டு வயது பெண் குழந்தை உள்ளது. இந்த ஜோடி நடிப்பிலும், நடனத்திலும் மட்டுமில்லாமல் படிப்பிலும் நம்பர் ஒன்தான். ராகவ், அண்ணா பல்கலைக் கழகத்தில் பி.இ. கம்ப்யூட்டர் சயின்ஸ் இன்ஜினியரிங்கில் கோல்ட் மெடலிஸ்ட். எம்.எஸ். படிப்பை அமெரிக்காவில் முடித்தவர். ப்ரீதா அமெரிக்காவில் விஷுவல் கம்யூனிகேஷன் முடித்தவர்.

அதெல்லாம் கிடக்கட்டும். கணவன்-மனைவிக்கிடையேயான நல்ல கம்யூனிகேஷனுக்கு ஒரு கோல்ட் மெடல் இருந்தால் அது ராகவ்-ப்ரீதாவுக்கு உரித்தானது!

- ராகவ்குமார்



# வேதனையில் உறங்கும் வெளிச்சம்



''எங்க பகுதியில் ஜூன் முதல் செப்டம்பர் மாதம் வரை நல்லா மழை பெய்யும். பெய்ஞ்சு என்னா பிரயோசனம்? ஆறு, வாய்க்கால் எதுவுமே எங்க ஏரியாவுல இல்ல. எல்லாம் மானாவாரிக் காடுங்க. நல்லா மழை கொட்டும். மறுநாளே எல்லாத் தண்ணீரும் வடிஞ்சி போயிடும். இந்த மழைய நம்பி பருத்தி விதைப்போம். அப்புறம் தண்ணீர் இல்லாமத் தவிப் போம்... இப்படியான விவசாயத்தின் சிக்கலில் மாட்டிக்கொண்டுதான் என் கணவர் தற்கொலை செய்துகொண்டார்'' என்கிறார் விதர்பாவிலிருந்து கோவைக்கு விவசாயப் பயிற்சி பெற வந்திருக்கும் உஷாபேட்கர் என்ற பெண். தென்னிந்திய பருத்திக் கழகமும் டாக்டர் எம்.எஸ். சுவாமிநாதன் ஆராய்ச்சி மையமும் இணைந்து, மகாராஷ்டிராவில் விதர்பா பகுதியில் பருத்தி சாகுபடியில் தோல்வி கண்டதால் தற்கொலை செய்து கொண்ட குடும்பங்களைச் சேர்ந்தவர்களை அழைத்து வந்து, பயிற்சி அளித்தார்கள். அப்போதுதான் மேற்படி செய்தியை நம்மி டம் தெரிவித்தார் அந்தப் பெண்.

''இந்தப் பயிற்சிக்கு வந்த பிறகுதான் பருத்தியில் புது ரக விதைகள் இருப்பதே எங்களுக்குத் தெரிஞ்சது. எங்க பகுதியில விவசாயம் முறையா செய்யறது இல்லை. எங்களுக்குத் தெரிஞ்ச அனுபவத்தை வைத்து ஊரெல்லாம் வட்டிக்குக் கடனை வாங்கி, சாகுபடி செய்வோம். கடைசியா, போட்ட பணம் பருத்திக்காயா உதிர்ந்து போய்டும். வட்டிக்கு வாங்கிய கடனைத் திருப்பிச் செலுத்த முடியாமல் தவிப்போம். கடன்காரன் தொல்லை தற்கொலைக்கு எங்களை அழைக்கிறது'' என்கிறார் ராமுஜி நாக்டோடே என்கிற விதர்பா விவசாயி.

**வி**தர்பாவின் வேறு சிக்கலைப் பற்றி நம்மிடம் விவரிக்கிறார், கடன் சுமையால் தந்தையை இழந்து தவிக்கும் மோகன் காம்ப்ளே. ''எங்க அரசு விவசாயிகளுக்கு மின்சார வசதி செய்வது இல்லை. இதனால் ஆழ்குழாய் கிணறுகள் அமைத்துக்கொள்ள முடிவதில்லை. சாகுபடி செய்வதற்கே வட்டிக்கு வாங்கும்போது, சொந்தமாக ஒரு ஆழ்கிணறு பற்றி எங்களால் நினைத்துக் கூடப் பார்க்க முடியாது'' என்கிறார்.

விவசாயத்தில் இருக்கக்கூடிய வேறு ஒரு பிரச்னை பற்றிப் பேசுகிறார் நாற்பத் தைந்து வயதாகும் சுலோச்சனா பால் பாண்டே என்ற பெண். ''எங்க விவசாய நிலம் வீட்டுல இருந்து ரொம்ப தூரத்துலே இருக்கு. ஒரு குடும்பத்துல எத்தனை பேர் இருந்தாலும் அத்தனை பேரும் விவசா யத்துல மட்டும் ஈடுபடறோம். பாதிப்பு வந்தா வேறு மாற்று வழி இல்ல. நாங்க



# விதர்பா

# தரும் கோவை !

கலப்பு பண்ணை விவசாயம் செய்யறதில்லை'' என்கிறார்.

**கோ**வையில் அளிக்கப்படும் பயிற்சி எப்படியிருக்கிறது என்றால், ''பல விஷயங்களை இங்கே கற்றுக்கொண்டோம். விதைகளின் தரம்... பருவ காலத்துக்கு ஏற்ற விதை... 'வயல்கள்' அமைக்கும் முறை பற்றி நிறைய சொல்லித் தந்தார்கள். நிறைய நம்பிக்கைகளை இந்த விவசாயப் பயிற்சி எங்களுக்கு ஊட்டுகிறது'' என்றார்கள் பயிற்சியில் கலந்து கொண்ட விதர்பா விவசாயிகள் பதினான்கு பேரும் ஒரே குரலில்.

''விதர்பாவில் ஏன் இப்படி விவசாயிகள் தொடர்ந்து தற்கொலை செய்து கொள்கிறார்கள்? இதனைத் தடுக்க என்ன வழி என்று யோசித்தோம். இது குறித்து எம்.எஸ்.சுவாமிநாதன் ஃபவுண்டேஷனின் ஆலோசனை பெற்றோம். தற்கொலை செய்து கொண்ட குடும்பங்களிலிருந்து பதினான்கு பேரை அழைத்து வந்து, அவர்களுக்கு நிறைய பயிற்சிகளை அளித்திருக்கிறோம். தற்கொலை போன்ற விபரீதங்களைத் தவிர்க்க இந்த முயற்சி...'' என்றார் தென்னிந்திய பருத்திக் கழகத்தின் மூத்த நிர்வாக அதிகாரி ராமஸ்வாமி.

இந்தியாவில், முப்பது நிமிடத்துக்கு ஒரு விவசாயி தற்கொலை செய்து கொள்கிறார் என்று 2002ல் எடுக்கப்பட்ட ஆய்வு அச்சுறுத்துகிறது. இப்போது அது மேலும் அதிகரித்திருக்கிறது! ''பசுமைப் புரட்சி என்பது ஒரு தொடர் போராட்டம்'' என்று கருத்து தெரிவித்துள்ளார் வேளாண் விஞ்ஞானி எம்.எஸ். சுவாமிநாதன். மத்திய அரசு பட்ஜெட்டில் விவசாயக் கடன் தள்ளுபடி செய்யப்பட்டுள்ளது. என்



• விடியலை நோக்கி...

றாலும், வங்கிக் கடனைத்தான் அரசு தள்ளுபடி செய்ய முடியுமே தவிர, கந்து வட்டிக்காரர்களிடமிருந்து விவசாயிகளைக் காப்பாற்ற, அவர்களைத் தொழிலில் வெற்றிபெறச் செய்வது ஒன்றுதான் வழி. கோவையில் நடந்ததுபோல் நாடெங்கும் முகாம்கள் நடக்குமா...?

செய்தியும் சித்திரமும்:

**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

# திராவிட இயக்கத்தில் இலக்கியவாதிகளே இல்லை!



*விலை போகாப் புத்தகங்கள்*
*ஏழெட்டு எழுதிவிட்டு*
*விற்பனையாகாமல்*
*ஈயோட்டிக் கொண்டிருக்கும்*
*வெத்துவேட்டு விருதா எழுத்தாளர்*

14.10.2003 தேதியிட்ட முரசொலியில் கருணாநிதி எழுதிய கவிதை இது. இதற்குப் 'பாட்டுடைத் தலைவர்' எழுத்தாளர் ஜெயமோகன், கூடுதலாக, 'வாலைச் சீண்டும் வானரம், தும்பறுந்த கன்று' என்று சில பட்டங்களை வேறு வாரி வழங்கியிருந்தார்.

ஏன் இத்தனை கோபம் கருணாநிதிக்கு?

2003, அக்டோபர் 5, எழுத்தாளர் இளையபாரதியின் நூல் வெளியீட்டுவிழா அண்ணா அறிவாலயத்தில் நடைபெற்றது. தலைமை வகித்தவர், வழக்கம்போல கருணாநிதி. அதில் கலந்துகொண்ட வண்ணதாசன், ஞானக்கூத்தன், இன்குலாப், அப்துல் ரகுமான் போன்றோர் மேடையில் கருணாநிதியைப் புகழ்ந்து பேசினர்.

மறுநாள் நடந்த தம்முடைய புத்தக வெளியீட்டு விழாவில் ஜெயமோகன் பொங்கிவிட்டார்:

'சாதித்த இலக்கியவாதிகள், தரமில்லாத எழுத்தைப் படைப்பவர்களை ஏன் துதிபாட வேண்டும்? இந்த மேடையில் நின்று சொல்கிறேன். மு.கருணாநிதி எழுதும் எழுத்துகள் தீவிர இலக்கியத்தின் எந்தப் பிரிவிலும் பொருட்படுத்தக் கூடியவை அல்ல.'



ஆத்திரத்தின் உச்சத்துக்குச் சென்றனர் கருணாநிதிக்கு நெருக்கமான இலக்கியவாதிகள். ஆளாளுக்கு வரிந்துகட்டிக்கொண்டு ஜெயமோகனைத் திட்டித் தீர்த்தனர்.

கருணாநிதியோடு நிறுத்திக் கொள்ளாமல் பல முக்கியஸ்தர்களை நோக்கித் தம்முடைய விமர்சனச் சாட்டையைச் சுழற்றினார் ஜெயமோகன். சிக்கியவர்கள் பட்டியலில் எம்.ஜி.ஆர்., சிவாஜியும் உண்டு. திராவிட இயக்க எழுத்தாளர்களும் உண்டு. கம்யூனிஸ்டுகளையும் விட்டு வைக்கவில்லை.

முதலில் திராவிட எழுத்தாளர்கள். தமிழ்நாட்டில் இருக்கும் இலக்கியவாதிகளில் 97 சதவிகிதம் பேர் திராவிட இயக்கத்தில் இருந்து உருவானவர்கள். மீதமுள்ள மூன்று சதவிகிதமே மற்ற சிற்றிதழில் இருந்து வந்தவர்கள் என்பது திராவிட இயக்க எழுத்தாளர்களின் வாதம். இந்த வாதத்துக்குப் பதிலடி கொடுக்க நினைத்தார் ஜெயமோகன்.

''மலையாள இலக்கியத் துறையைப் போன்ற அறிவுச் சூழல், தமிழிலக்கி



● ஜெயமோகன்

யத்தில் இல்லாமல் போனதற்கு திராவிட இயக்கமே காரணம். தனித் தமிழ் இயக்கம், தமிழிசை இயக்கம் ஆகியவற்றை மேலோட்டமான கோஷங்களாகத் திரித்ததும் நவீனத்துவ இயக்கமான மணிக்கொடி மரபை இருட்டடிப்பு செய்ததும் திராவிட இயக்கத்தினரே. இடதுசாரி அரசியலின் கோஷங்களைத் திருடிக்கொண்டு ஆடம்பர, அலங்கார, அரசியல் மூலம் அவர்களை ஓரங்கட்டியதும் திராவிட இயக்கத்தின் எதிர்மறைப் பங்களிப்பு. தமிழக கலாசார மறுமலர்ச்சியின் உண்மையான நாயகர்களாக அடையாளம் காண வேண்டிய அயோத்திதாச பண்டிதர், தஞ்சை ஆபிரகாம் பண்டிதர், லட்சுமணப்பிள்ளை போன்றோரை, வரலாற்றிலிருந்து மறைத்து தங்கள் இயக்கத்தின் அசட்டுப் பிரசாரகர்களை மட்டும் முன்னிறுத்தியது திராவிட இயக்கம். திராவிட இயக்கத்தில் இருந்து உருப்படியாக ஒரு இலக்கியவாதியும் வரவில்லை'' என்ற ஜெயமோகனின் இந்த உரைவீச்சுகள் கடுமையான அதிர்வுகளை ஏற்படுத்தின. தம்முடைய 'பின்



தொடரும் நிழலின் குரல்' என்ற நாவலின் மூலம் கம்யூனிஸ்டுகளையும் வறுத்தெடுத்தார் ஜெயமோகன்.

முக்கியமாக, எம்.ஜி. ஆரின் மழலைப் பேச்சையும் சிவாஜியின் நடிப்பையும் தம்முடைய அசகாய (வசை / காய?!) வார்த்தைகளால் கிண்டல் செய்திருந்தார். எல்லாவற்றையும் தன்னுடைய www.jeyamohan.in என்ற வலைப்பதிவில் பத்திரப்படுத்தியிருக்கிறார்.

'இன்றுவரை அவர் ஒரு நல்ல கவிதை கூட எழுதவில்லை என்பதே என் மதிப்பீடு. அரசியல் பதவிக்கு முன்னோட்டமாக, கவிஞர் என்ற அடையாளம் தேடவே அவர் களத்தில் இருக்கிறார். இலக்கிய நோக்கமேதும் அவருக்கு இல்லை. இலக்கியத்தில் அவருக்கு உண்மையான ஆர்வம் இருக்கும் பட்சத்தில், அவர் செல்ல வேண்டிய தூரம் மிக அதிகம். அதற்குத் தொடர் வாசிப்பும் சலியாத இலக்கிய முயற்சியும் தேவை. சுயநலம் கருதும் போலிப் பாராட்டுகளை ஏற்று மயங்கவேண்டாம்.'

- ஜெயமோகனின் இந்த விமர்சனம் யாரைப்பற்றியதாக இருக்கும்...? ஆமாம்! சாட்சாத் கனிமொழியைப் பற்றியதுதான்.

உலகில் யாரும், எவரும் தமது விமர்சனத்துக்கு அப்பாற்பட்டவர்கள் அல்ல என்பதை நிரூபிப்பதே ஜெயமோகனின் முயற்சி என்போரும் உண்டு! எப்படி இருந்தாலும் ஜெயமோகன் தொடர்பான சர்ச்சைகள் எல்லாமே கருத்து சார்ந்தவை என்பதால், எதிர்வினைகளும் அந்த வகையிலேயே இருக்கின்றன.

*(அடுத்த இதழில்... சானியா மிர்ஸா)*

# ஜாலி ஸ்டோர்ஸ்

கலைஞரின் போர்க் கேடயம்...

'ஃ' (அக்கு)

சமீபத்தில்
ரிலீஸாகியுள்ள
படங்களில்
அவர்களுக்குப்
பதில்
இவர்கள்
நடித்திருந்தால் எப்படி
இருந்திருக்கும்?

# இந்தப் படங்களில்



ஹர்பஜன் சிங் -
சைமண்ட்ஸ்
கலக்கும்
'வம்புச்
சண்ட'



'அஞ்சாதே' படத்தில் மாறன் பிரதர்ஸ்

# இவர்கள்...

புரட்சிக் கலைஞர்
நடிக்கும் 'தூண்டில்'



திரு & திருமதி பொதுஜனம்
நடிக்கும் என்றும் மாறாத...
'ஒன்பது ரூபாய் நோட்டு'



# காஃபியா? டீயா?

என் மாமனாரை இரயிலேற்றிவிட நின்றுகொண்டிருந்தபோதுதான் அந்த நபரைக் கவனித்தேன்.

கையில் பெட்டியுடன் கொஞ்சம் முன் வழுக்கை, டை அடித்த தலை என்று வயது கூடித் தெரிந்தாலும், அடிக்கொருமுறை தோளைக் குலுக்கி, மூக்கைத் தடவும் அந்த 'மானரிசம்' அவனைக் காட்டிக் கொடுத்தது.

அவன் நிச்சயம் என் சிறு வயதுத் தோழன் பாச்சு என்கிற பார்த்தசாரதிதான்!

அருகில் சென்று தோளைத் தொட்டேன். திரும்பினான்.

''பாச்சு?''

சிறிது யோசனைக்குப் பிறகு, ''சுந்து?'' என்றான் என் பெயரைச் சுருக்கி.

''டேய், டேய்...'' என்று சந்தோஷ அதிர்ச்சியிலிருந்து அவன் மீள முடியாமல் தவிப்பது புரிந்தது. எனக்குள்ளும்தான் அதே அதிர்வுகள்.

அதற்குள் ரயில் கூக்குரலிட, என் கையில் ஒரு விசிட்டிங் கார்டைத் திணித்தான்.

சிறு தலையசைப்புடன் காஃபி டம்ளரை நீட்டினாள், என் மனைவி மீனா.

''ராத்திரிக்கு டிபன் செய்யட்டுமா இல்லை, சாப்பாடா?'' என்றாள்.

மீனா எப்போதுமே இப்படித்தான் அலட்டிக்கொள்ளாத ரகம்.



இப்பொழுது வசிப்பது பட்டணம் என்றாலும், எங்கள் வேர்கள் காரைக்குடி அருகிலுள்ள கிராமத்தில்தான்.

பார்த்தசாரதியின் அப்பாவுக்கு வங்கி அதிகாரியாய்ப் பதவி உயர்வு கிடைத்து, வேறு மாநிலத்துக்கு மாற்றலானது. எங்களின் நட்பை, அந்த மாற்றல் சனியன் பிரித்தது. எங்கள் இருவர் அழுகையில், ஊர்க் குளம் நிரம்பி வழிய, பாச்சு தன் பெற்றோருடன் மறைந்து போனான்.

''என் பால்ய சிநேகிதன்... அதான் அடிக்கடி சொல்வேனே பாச்சு... அவனைப் பார்த்தேன்.''

'என், நம்ம வீட்டு வாசல்லே ரஜினி நிற்கறாரு'ன்னு சொன்னால்கூட, 'அவருக்கு காஃபி போடவா? டீ போடவா'ன்னு கேட்பாள்.

இரண்டு நாட்கள் கழித்து தொலைபேசியில் நம்பர்களை படபடப்பாய் அழுத்தினேன்.

''ஹலோ, நான் சுந்து...''

''அது யாரு காலையிலேயே தூங்க விடாம சுந்து, பொந்துனு...'' என்று அதட்டலாய்ப் பெண் குரல் கேட்க, ராங் நம்பரோ என்று படக்கென ஃபோனை வைத்துவிட்டேன்.



அலுவலகம் சென்ற பிறகு மீண்டும் தொலைபேசியில் அழைத்தேன்.

"ஹேய், சந்து... ஸாரிடா! காலையிலே நான் ஊரிலிருந்து வீடு திரும்பவே எட்டு மணியாயிடுச்சு. என் மனைவி சொன்னாள்."

கிட்டத்தட்ட ஒரு மணி நேரம் எங்கள் உரையாடல் தொடர்ந்தது.

"நாளன்னிக்கு ஞாயிற்றுக்கிழமை தானே! நீயும் உன் குடும்பமும் நம்ம வீட்டுக்கு மதியம் சாப்பிட வந்துடுங்க. நாம நிறைய பேசலாம்" என்று பாச்சு உத்தரவிட, சந்தோஷமாய்த் தலையசைத்தேன்.

**பா**ச்சு நல்ல வசதியான வாழ்க்கை வாழ்கிறான் என்பதை, அவன் வீடும் போர்டிகோவில் நிற்கும் காரும் பறை சாற்றின.

நானும் மனைவியும், என் மகனும் தயக்கமாய் அந்த வீட்டினுள்ளே நுழைந்தோம்.

"வாடா, வாடா" என்று பாச்சு ஓடி வந்து கட்டிக்கொண்டதும், தயக்கமெல்லாம் ஓடிவிட்டது.

பாச்சுவுக்கு ஒரு மகனும் மகளும்! கிட்டத்தட்ட என் மகன் வயதுதான். 'ட்வின்ஸ்' என்றான்.

ஹால் சோபாவில் அமர்ந்தபடி நானும் அவனும் அரட்டையடிக்க, என் குடும்பமும் அவன் குடும்பமும், எங்களையே வேடிக்கை பார்த்தபடி அமர்ந்திருந்தனர்.

என் பெற்றோர் கிராமத்திலேயே

கிருஷ்ணா

இருப்பதால், நான் அடிக்கடி அங்கு போவதைச் சொன்னேன்.

''அதான்டா வாழ்க்கை. எப்படி கவலையே தெரியாமல் வளைய வந்தோம்? நம்ம ஊர், கோவில், குளம், பள்ளிக்கூடம்...'' என்று ஒன்றுவிடாமல் கேட்டான் ஆர்வமாய்.

'' 'எங்கே போறீங்க' செட்டியார் எப்படிடா இருக்காரு?''

''ம், இருக்காரு! வயசு எழுபது இருக்கும்'' என்றேன்.

எங்கள் கிராமத்துப் பெரியவர் அவர். ஊருக்குப் போக பேருந்து ஏறினால் 'காரைக்குடிக்கு ஒரு டிக்கெட் கொடுங்க, காரைக்குடி போக டிக்கெட் கொடுங்க' என்று கேட்டுக்கொண்டே இருப்பார்.

எங்களை இழுக்காதீங்க.''

மிதந்துகொண்டிருந்த என் கயிறு அறுபட... தொப்பெனத் தரையில் விழுந்தேன்.

''ஏன் அப்படிச் சொல்றே?''

''நீங்களும் உங்க நண்பரும் சந்திச்சதுமே, இரண்டு பேரும் டிராயர் போட்ட பையன்களாய் மாறிடறீங்க. அதைப் பார்க்க எனக்கும் மகிழ்ச்சியாயிருக்கு. ஆனால், நான் அவரோட மனைவியையும் குழந்தைகளையும் பார்க்கறப்ப, இன்றைய அவங்க 'ஸ்டேட்டஸ்'தான் தெரியுது.''

அவள் வார்த்தைகளை உள்வாங்கி ஜீரணிக்க எனக்குச் சிரமமாயிருந்தது.

''அப்ப, அடுத்த ஞாயிறு நம்ம வீட்டு விருந்துக்கு அவங்களைக் கூப்பிட்டிருக்கோமே'' என்றேன்.

''வந்தால், விருந்து சமைப்போம்''



''குழந்தைகிட்டே அப்படி என்ன ரகசியம் சொன்னே? உடனே தூங்கிடுச்சு!''

''இனிமே பாட மாட்டேன்னேன்... அவ்வளவுதான்.''

- ஜீ.வி.சுபாஷ்

யாரும் அவரிடம் 'எங்கே போறீங்க?' என்று கேட்டு விட்டால், அவ்வளவுதான்! வீடு திரும்பிவிடுவார். 'வெளியே கிளம்பறப்ப 'எங்கே போறே'ன்னு கேட்டுட்டா, விளங்கவா செய்யும்' என்று கோபப்படுவார்.

பாச்சுவிடம் விடைபெற்று, வீடு திரும்பிய பின்னும், நான் மிதந்து கொண்டே இருந்தேன்.

இரவு படுக்கப்போகும்போது மீனா மெதுவாய்ச் சொன்னாள்:

''இதோ பாருங்க, உங்க நட்பு இதே போல தித்திப்பாய் நீடிக்கணும்னா, அது உங்களுக்குள்ளே மட்டும் இருக்கட்டும்.

என்றாள்.

என் மனைவி சொன்னதுபோலவே ஆகிவிட்டது.

''திடீர்னு ஊருக்குப் போற வேலை! அதனால என்னடா கந்து, நாம ரெண்டு பேரும் அடிக்கடி சந்திக்கப்போறோமே! எதுக்கு அவங்களையெல்லாம் சிரமப்படுத்திக்கிட்டு'' என்றான் பாச்சு.

ஞாயிற்றுக்கிழமை பிற்பகல் பாச்சுவைக் கடைத்தெருவில் பார்க்க நேர்ந்த போது, அவன் என்னைப் பார்ப்பதற்கு இடங்கொடாமல் நழுவி வீடு திரும்பினேன்.

''காஃபியா? டீயா?'' மீனா எப்போதும் போல் கேட்டாள்.

# சிதம்பரம் திருக்குறள் சொன்னதன் நோக்கம் என்ன?

● நோ முருகானந்தம், திருவைகாவூர்

? பட்ஜெட் தாக்கலின் போது 'கொடை அளி செங்கோல் குடி ஓம்பல் நான்கும் உடையானாம் வேந்தர்க்கு ஒளி' என்ற திருக்குறளை ப.சிதம்பரம் படித்துக் காட்டியதன் நோக்கம் என்ன?

! நான்கும் இன்றைய அரசியலில் இல்லை என்பதை எடுத்துக்காட்டுவதற்காக இருக்கலாம்!

● கே.கணேசன், மறைமலை நகர்

? பாகிஸ்தானில் ஏற்பட்டுள்ள ஜனநாயக மாற்றம் நீடிக்குமா?

! மக்கள் நலனில் கவனம் செலுத்தி ஊழலற்ற ஆட்சியைத் தந்தால் இன்னொரு ராணுவப் புரட்சி தோன்றாது. ஜனநாயகம் தழைப்பது, தற்போது தேர்தலில் வெற்றி பெற்றுள்ளவர்கள் கையில்தான் இருக்கிறது.

● உமரி பொ.கணேசன், மும்பை-37

? ரயில்வே பட்ஜெட்டை வெறும் கண் துடைப்பு என்று ஜெயலலிதா கூறுகிறாரே - எப்படி?

! அது அப்படித்தான். அரசியலில் இதற்கு, 'ஆளும் கூட்டணியில் இல்லாதோர் தர்மம்' என்று பெயர்!

● ஏ.எஸ்.யோகானந்தம், கலிங்கியம்

? 'மதுபானக் கடைகள் இனிமும் மூன்று மணி நேரம் திறந்திருந்தால் போதும்' என்று மருத்துவர் ராமதாஸ் கூறியிருப்பது சரியா?

! சரியில்லை. அந்த மூன்று மணி நேரத்தில் கூட்டம் அடித்துப் பிடித்து கடையை மொய்க்கும். இதனைப் பயன்படுத்தி, வெளியே ரகசியக் கடை விரிக்க ஆட்கள் முனைப்பார்கள். மதுக் கடைகளுக்கு நிரந்தரப் பூட்டு போடுவதே சரியான தீர்வாக இருக்கும்.

● ஜி.எஸ்.ராஜன், சென்னை - 42

? தகுதி, திறமையை வைத்துதான் விளையாட்டுப் பந்தயங்களில், உலக அளவில்கூட பரிசுகளும் பதக்கங்களும் கொடுக்கப்படுகின்றன. ஆனால், இங்கே கல்வி, வேலை வாய்ப்புகளில் தகுதி - திறமையைக் கணக்கில் கொள்ளாமல், சாதி, மத அடிப்படையில் ஒதுக்கீடு போன்றவற்றைக் கடைபிடிப்பது ஏன்..?

! சத்தமா பேசாதீங்க! 'ஒலிம்பிக்ஸ்லயும் இட ஒதுக்கீடு வேணும்'னு இந்திய அரசியல்வாதிகள் ஆரம்பிச்சுடுவாங்க!

● இரா. சக்கரபாணி, மதுரை

? நாட்டில் முதன்முறையாக சிறு - குறு நடுத்தரத் தொழில்களின் வளர்ச்சிக்குத் தனிக் கொள்கையை தமிழக முதல்வர் வெளியிட்டுள்ளது பற்றி...?

! சலுகைகள், மானியங்கள் மட்டுமே தொழிலை வளர்த்து விடாது. இவற்றைப்

## நீங்கள் கேட்டவை -தராசு

பெறுகின்றவர்கள் தொழிலை வளர்க்கும் ஆற்றல் உடையவர்களாகவும் அரசிடம் பெற்ற சலுகைகளை நாளடைவில் திருப்பித் தரும் அளவில் யோக்கியப் பொறுப்புடையவர்களாகவும் இருக்க வேண்டும். இங்கேதான் கட்சிக் கண்ணோட்டம், அதிகார துஷ்பிரயோகம், லஞ்சஊழல் போன்றவை புகுந்து காரியத்தைக் கெடுக்கின்றன.



● அடுத்திருந்து அட்வைஸ்..!

● **டி.ஜெய்சிங், கோவை**

***? அரசியலில் புகழ் பெற எப்படிப் பேச வேண்டும்?***

! தற்காலிகப் புகழும் பணமும் பெற, சமயத்துக்கு ஏற்ற மாதிரி பேசவேண்டும்; நிரந்தரப் புகழ் பெற, நிரந்தர உண்மைகளைப் பேசவேண்டும்.



● காற்றில் வாக்குறுதி!

● **ஏ.கருமார், காட்பாடி.**

***? 'நான் முதல்வர் ஆவேன்' என்று பேச்சில்கூடச் சொல்ல, இன்று வைகோவால் முடியவில்லையே?***

! முடியாத காரியத்தைச் சொல்லாமல் இருப்பது தானே நல்லது!



● ஈனுவைப் புரட்டுக்கு அவை

● **எஸ்.விஜயலட்சுமி, ஸ்ரீவில்லிபுத்தூர்**

***? 'தி.மு.க. - அ.தி.மு.க. அரசுகள், தமிழ்நாட்டை மதுவால் தள்ளாட வைத்து விட்டன' என்று கூறும் ராமதாஸ், அவ்விரு கட்சிகளுடன் மாறி மாறி கூட்டணி வைத்துக்கொண்டது ஏன்?***

! எல்லா கொள்கைகளிலும் கூட்டணி கட்சிகள் ஒன்றுபடுவது இயலாத காரியம். கூட்டணி அமைவது குறைந்தபட்ச செயல் திட்டத்தின் அடிப்படையில்தான். ராமதாஸ், கூட இருந்து குழி பறிக்கவில்லையே; கூட இருந்து குட் அட்வைஸ் தான் தருகிறார்.

● **ஆர்.செந்தில்முருகன், திருக்கோவிலூர்**

***? பாலியல் பலாத்கார வழக்கில் தம்மை நிரபராதி என்று அறிவிக்க வேண்டும் என நடிகர் மன்சூர் அலிகான் கோரியதை உச்ச நீதிமன்றம் மறுத்து, அபராதம் கட்ட வேண்டும் என்று தீர்ப்பு அளித்துள்ளதே?***

! வழக்கு தொடுத்தவர், அதை வாபஸ் பெறுவதாலோ அல்லது சமரசத்துக்கு ஒப்புக்கொள்வதாலோ ஒருத்தர் நிரபராதி ஆகிவிட முடியாது. குற்றம் குற்றம்தான். தீர்ப்பு சரியே.

● **ச.நாகரத்தினம், திருப்பூர்**

***? மனமுவந்து மனைவி கணவனுக்குப் பரிமாறுவதும், கணவன் விரும்பிச் சாப்பிடுவதும் இன்றைய கால கட்டத்தில் குறைந்து வருகிறதே... குடும்ப கலாசாரம் எதிர்காலத்தில் என்ன ஆகும்?***

! மனைவி பரிமாற கணவன் உண்பதைவிட, இருவரும் ஒருவரையொருவர் உபசரித்துக் கொண்டு சேர்ந்துண்பது மிகவும் நல்லது. உறவும் உணர்வும் வளம் பெறும். குடும்ப கலாசாரம் மேம்படும். சேர்ந்து சாப்பிட்டவாறு

டி.வி. பார்ப்பது எல்லா வற்றையும் பாழாக்கும்.

● வே.சித்ரா, கும்மிடிப் பூண்டி

? 'தமிழகத்தில் நிலவும் மின்சாரப் பற்றாக்குறை மார்ச் மாதத்துக்குள் சரி செய்யப்படும்' என்று தமிழக மின்துறை அமைச்சர் கூறுகிறாரே?

! தற்போது பருவநிலை காரணமாகத் தடைப்பட்டுள்ள காற்றாலை மின் உற்பத்தி அதற்குள் மீண்டும் ஆரம்பித்துவிடும் என்ற நம்பிக்கையில் சொல்கிறார். தற்போது ஏற்பட்டுள்ள பற்றாக்குறைக்கு அது மட்டுமே காரணமல்ல என்பதால், அமைச்சர் சொல்வது காற்றோடு போனாலும் போய்விடும்.

● லலிதா செல்லப்பா,
சென்னை - 75 ★

? வெளிநாட்டுத் தொழிலதிபர்களுக்கு, தொழில் துவங்க ஐந்தாண்டுகளுக்கு வரிச்சலுகை அளிக்கும் மத்திய அரசு, சாதாரண இந்தியக் குடிமகனை மட்டும் கசக்கிப் பிழிந்து வரிகள் வசூலிப்பது ஏன்?

! உலக்குவிக்கிறேன் பேர்வழி என்று அங்கே அள்ளிக் கொடுத்த பிறகு, அரசின் ஆடம்பரச் செலவுகளுக்கு என்ன பண்ணுவது...? அதனால்தான் இங்கே கசக்கிப் பிழிகிறார்கள். நமது அரசுகள் தொடர்ந்து போட்டு வரும் தப்புக் கணக்கு இது.

● அ.ச.நாராயணன், பாளையங்கோட்டை

? ஒரு வேளை பா.ஜ.க. - அ.தி.மு.க. கூட்டு ஏற்பட்டால், நீங்கள் பா.ஜ.க.வுக்குத் தெரிவிப்பது வாழ்த்தாக இருக்குமா? அனுதாபமாக இருக்குமா?

! அனுதாபமல்ல; ஆழ்ந்த அனுதாபம்!

● வாத.சண்முகசுந்தர வடிவேலு, வாழப்பாடி

? ஐ.டி.யைத் தவிர, இளைய சமுதாயத்தினருக்கு வேறு லாபகரமான பணிகள் இல்லையா?



* பேசத் துணியாத வார்த்தை!

! நிறைய இருக்கின்றன. ஆனால், அவற்றில் ஐ.டி. துறை அளவுக்கு அபரிமித வருமானம் இல்லை. இதற்கு முக்கிய காரணம், ஏற்றுமதி சார்ந்த அத்துறைக்கு அளிக்கப்பட்டுள்ள ஏராளமான வரிச் சலுகைகள்தான்.

● எஸ்.கருணையானந்தம், உசிலம்பட்டி ❒

? விவசாயிகள் பிரச்னை என்று மூன்று நாட்கள் நாடாளுமன்றத்தையே நடத்த விடாமல் அமளி செய்தவர்கள், பட்ஜெட்டில் 'விவசாயிகள் கடன் தள்ளுபடி' என்று அறிவித்ததும் 'இது தேர்தல் கண்ணோட்ட பட்ஜெட்' என்கிறார்களே?



* மாறாது நீடிக்கும் திருப்பணம்!

! விவசாயிகள் சார்பில் எதிர்க்கட்சியினர் அமளி; பட்ஜெட்டில் விவசாயிகள் கடன் ரத்து அறிவிப்பு; அதை 'தேர்தல் பட்ஜெட்' என்று எதிர்க்கட்சி விமர்சிப்பது முதலிய எல்லாமே வோட்டுப் பிடிக்கும் நோக்கில்தான். நாட்டு நலனை உத்தேசித்து அல்ல! ●

❒ ரூ.100 பரிசு பெறுபவர் :
எஸ்.கருணையானந்தம்,
உசிலம்பட்டி

★ ரூ.50 பரிசு பெறுபவர் :
லலிதா செல்லப்பா,
சென்னை - 75

எனக்கு வயது அறுபத்தொன்று. கண்களில் காட்ராக்ட் பாதிப்பு ஏற்பட்டிருக்கிறது. லேசர் முறையில் அறுவை சிகிச்சை செய்து கொள்ளலாம் என்கிறார்கள் சிலர். இந்த வயதில் லேசர் சிகிச்சை செய்தால், அதனால் பாதிப்பு ஏற்பட வாய்ப்பு உண்டா?

- கே.பாலசுந்தரம், மதுரை

***கண் மருத்துவர் டாக்டர் அருள்மொழிவர்மனின் விளக்கம் :***

"லேசர் மூலம் காட்ராக்ட் சிகிச்சையா? அப்படி ஒரு சிகிச்சை உலகிலேயே கிடையாதே! காட்ராக்ட் என்பது என்ன? அறுவை சிகிச்சை மூலம் மூடியுள்ள விழித்



• எஸ்.பார்த்தசாரதி

திரையை எடுத்துவிட்டு, அங்கு லென்ஸைப் பொருத்துவதுதான்.

புதிதாக ஒரு எளிய சிகிச்சைமுறை சமீபத்தில் அறிமுகமாகியிருக்கிறது. இதில் ஊசி போடுவதில்லை. கண்களைச் சுற்றி பாண்டேஜ் கட்டுவதில்லை. தையல் போடுவதில்லை. சுமார் இரண்டு மில்லி மீட்டர் அளவுக்கு மட்டுமே திரையை நீக்கி விட்டு, அங்கு லென்ஸைப் பொருத்தி விடுகிறோம். இதை Phaco - Emulsification என்கிறார்கள். ஒருவேளை, இதைத்




தான் லேசரோடு போட்டுக் குழப்பிக் கொண்டிருக்கிறார்களோ என்னவோ?

மாலிக், க்ளுக்கோமா, டயாபடிக் ரெட்டினோபதி ஆகியவற்றுக்கான சிகிச்சைகளில் லேசர் பயன்படுத்தப்படுகிறது. பொதுவாக, க்ளுக்கோமா நாற்பது வயதைத் தாண்டியவர்களுக்கும், டயாபடிக் ரெட்டினோபதி அறுபது வயதுக்காரர்களுக்கும் அதிகமாக செய்யப்படுகிறது. சொல்லப் போனால், பிறக்கும்போதே சர்க்கரை நோயுடன் பிறந்த குழந்தைகளின் சிகிச்சையில்கூட லேசர் பயன்படுத்தப்படுகிறது. எனவே வயதுக்கும் லேசர் சிகிச்சைக்கும் சம்பந்தம் இல்லை."

***வயதானால் எலும்புகள் உறுதியில்லாமல் போய்விடும் என்கிறார்களே.***

## ப்ரிஸ்கிரிப்ஷன்

**எலும்புகளை உறுதியாக வைத்துக்கொள்வது எப்படி?**

*- ரமேஷ், மதுரை*

**எலும்புநல அறுவை சிகிச்சை மருத்துவர் டாக்டர் எம்.பார்த்தசாரதியின் விளக்கம்:**

''எலும்பும் தசையும் ஒன்றையொன்று சார்ந்திருப்பவை. ஒன்றின் பலம் மற்றதுக்கும் பரவும். ஒன்றின் பாதிப்பு மற்றொன்றுக்குச் சிக்கலை வரவழைக்கும். தசைகள் உறுதியாக இருந்தால், எலும்புகள் தாமாக உறுதியடையும்.

# உறுதியாகட்டும்!

**குண்டாக இருப்பவர்களின் எலும்புகள் உறுதியாக இருக்கும் என்று சொல்ல முடியாது.**

கையைத் தூக்கவும் காலை மடக்கவும் தசை, எலும்பு ஆகிய இரண்டின் செயல்பாடுகளும் தேவை. இப்படியெல்லாம் செயல்பட வேண்டுமென்றால், மூளை கட்டளையிட, அதை நரம்புகள் தசைகளுக்கு உணர்த்த, தசைகள்தான் எலும்புகளை ஆட்டுவிக்கும். எனவே, நட்டுவனார் உறுதியாக இருந்தால்தான் நாட்டியக்காரரும் பொலிவோடு விளங்குவார்.

குண்டாக இருப்பவர்களின் எலும்புகள் உறுதியாக இருக்கும் என்று சொல்ல முடியாது. சொல்லப்போனால், ஊளைச் சதைக்காரர்களின் எலும்புகள் உறுதியாக இருந்துவிடுவதில்லை. மல்யுத்த வீரர்களும் பிரபஞ்ச ஆணழகர்களும் குண்டாக இருந்தும் அவர்களின் எலும்புகள் உறுதியானவை என்றால், அதற்குக் காரணம் உடற்பயிற்சி. அவர்கள் உடற்பயிற்சிகளால் தசைகளை உறுதியோடு உருண்டு திரண்டு வைத்திருப்பதால், எலும்புகளும் உறுதியாக உள்ளன.



எளிய உடற்பயிற்சிகள் மூலம் எலும்புகளை உறுதியானதாக்க வாய்ப்பு உண்டு. ஆனால், அதற்காக திடீரென்று ஒரேயடியாக அதிக வேலையைத் தசைகளுக்குக் கொடுக்க வேண்டாம்.''

**- ஜி.எஸ்.எஸ்.**



## கடுகடுப்பில் பா.ம.க.

# கண்களுக்குத் மூன்றாவது

**கொ**ள்கை ரீதியில் முரண்பட்டாலோ அல்லது தலைவர்களுக்கிடையே நிலவும் ஈகோ மோதல்களின் விளைவாகவோ, இந்திய அரசியலில் அவ்வப்போது மூன்றாவது அணி என்ற கோஷம் எழுவது உண்டு. குறிப்பாக, காங்கிரஸ் மற்றும் பா.ஜ.க.வுக்கு மாற்றாக, மூன்றாவது அணி அமைக்க வேண்டும் என்பது இடதுசாரிகளின் நீண்ட நாள் முயற்சி. மிக அலுத்துப்போன கோஷங்களில் மூன்றாவது அணி கோஷமும் ஒன்றாகிவிட்டது. செய

மாதங்களுக்கு முன் முலாயம் சிங் - சந்திரபாபு நாயுடு முயற்சியால் முகம் காட்டிய மூன்றாவது அணி, அரும்பிலேயே கருகிவிட்டது. முதலில் ஆர்வம் காட்டிய ஜெயலலிதாவும் சௌதாலாவும் முரண்டு பிடித்து, கழன்று சென்றுவிட்டார்கள். மோடிக்கு விருந்தளித்து, ஒரேயடியாக, மூன்றாவது அணிக்கு டாடா காண்பித்துவிட்டார் ஜெ. இப்போது நிலைமை என்னவென்றால், மூன்றாவது அணிக்கு ஆக்ஸிஜன் தேவை. அந்த ஆக்ஸிஜனைக் கொடுக்க இடதுசாரிகள் வரமாட்டார்களா என்று ஏங்கிக்கொண்டிருக்கிறார்கள், முலாயமும் நாயுடுவும்.

**இ**டதுசாரிகளைப் பொறுத்தமட்டில்; மூன்றாவது அணி என்பது ஒரு நீண்ட நாள் கனவு. ''வரும் பாராளுமன்றத் தேர்தலிலோ அல்லது, அடுத்து 2011 சட்டமன்றத் தேர்தலிலோ மூன்றாம் அணி அமைந்தே தீர வேண்டிய அவசியம் இல்லை'' என்கிறார்கள் தமிழக கம்யூனிஸ்ட் தலைவர்கள்.

"ஆனால், முயற்சிகள் தொடரும். இப்போது காங்கிரஸ் மற்றும் பா.ஜ.க. அணியிலுள்ள வலுவான மாநில கட்சிகளையும், கணக்கெடுத்துக்கொண்டுதான்

மூன்றாவது அணியைப் பற்றிப் பேசி வருகிறோம். நாங்கள் ஏற்கெனவே மூன்று மாநிலங்களில் வலுவாக இருப்பதால், அங்கு மூன்றாவது அணி அமைப்பதில் எங்களுக்குச் சிரமமில்லை. எதிர்வரும் பாராளுமன்றத் தேர்தலுக்குள் வலுவான மூன்றாவது அணிக்கான வாய்ப்பு இல்லாத பட்சத்தில் இடதுசாரிகள், அந்தந்த மாநில சூழல்களுக்கு ஏற்ப கூட்டணி அமைப்பதே உகந்ததாக இருக்கும். ஆனால், மக்கள் விரோத காங்கிரஸுக்கும், மதவாத பா.ஜ.க.வுக்கும் மாற்று அணி அமைந்தே தீரவேண்டும் என்ற எங்கள் நீண்ட கால நோக்கத்தில் எந்த மாற்றமும் இருக்காது'' என்கிறார்கள், இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ் மாநில செயலாளர் தா.பாண்டியனும், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மத்திய குழு உறுப்பினர் டபிள்யூ ஆர்.வரதராஜனும்.

# தெரியாத அணி!

இதற்கிடையில் ராஜ்ய சபைக்குப் போட்டியிட வாய்ப்பு கிடைக்காத நிலையில், பா.ம.க. மிகவும் கோபத்தில் இருக்கிறது. தங்களுக்கு வாய்ப்பு கொடுக்காவிட்டாலும், ஜெகத்ரட்சகனுக்கு கலைஞர் வாய்ப்பே கொடுக்கக்கூடாது என்பதில், பா.ம.க. மிக உறுதியாக இருக்கிறது. ஜெகத்துக்கு கலைஞர் வாய்ப்பு கொடுத்தால், வரும் மாதங்களில் பா.ம.க., தி.மு.க. ஆட்சியை எதிர்த்துத் தீவிரமாகக் குரல் கொடுக்கத் துவங்கும். பா.ம.க.வைக் கழற்றி விடுவதே நல்லது என்பது மூத்த தி.மு.க. தலைவர்கள் கருத்து. ஆனால், போட்டியிடும் இரண்டு இடங்களில், ஒன்றை ஜெகத்துக்குக் கொடுத்து மேலும் பா.ம.க.வைச் சங்கடப்படுத்த வேண்டாமென்று கலைஞர் விரும்புவதாக லேட்டஸ்ட் தகவல்கள் சொல்கின்றன.

எப்படிப் பார்த்தாலும் வரும் பாராளுமன்றத் தேர்தலில் தமிழகத்தில் தி.மு.க. - காங்கிரஸ், கம்யூனிஸ்ட் கட்சிகள், மற்றும் விடுதலைச் சிறுத்தைகள் ஓரணியாகவும், அ.தி.மு.க. - ம.தி.மு.க., பா.ஜ.க., ச.ம.க. ஓரணியாகவும் போட்டியிடும் காட்சியே பிரகாசமாகத் தெரிகிறது. தே.மு.தி.க. தனியாகவே களமிறங்கக் கூடும். பா.ம.க., கிடைக்கும் அரசியல் ஆதாயத்துக்கேற்ப தி.மு.க. அணியிலோ அல்லது அ.தி.மு.க. அணியிலோ தொற்றிக் கொள்ளக் கூடும். எந்த அணியில் அது இருந்தாலும், அது அந்த அணிக்குக் கூடுதல் பலம்தான்.


● தா.பாண்டியன்


● இல.கணேசன்


● ஜெகத்ரட்சகன்

வரும் அக்டோபர் அல்லது நவம்பருக்குள் பாராளுமன்றத் தேர்தல் என்று செய்திகள் அடிபடும் நிலையில் கட்சிகள் மாறும் வாய்ப்பு மிகக் குறைவே.

– ப்ரியன்



# கலாசாரம் குறைந்து வருகிறதா

● **என்.பாலகிருஷ்ணன், மதுரை**

***'தற்கொலை' செய்துகொள்வதற்குக் கூட தைரியம் வேணும்தானே...?***

பயந்துபயந்து வாழப் பிடிக்காமல் தைரியமாகத் தற்கொலைசெய்து கொள்வதைவிட, போனால் போகிறது என்று பயந்துகொண்டே தைரியமாக வாழ்வது சாலச்சிறந்தது.

● **த.சத்தியநாராயணன், அயன்புரம்**

***புடைவைகட்டும் வழக்கம் ஆண்களுக்கு இருந்திருந்தால்...?***

மகாபாரதத்தில் துச்சாதனன் தருமரைத் துகிலுரிந்திருப்பான். தருமரின் மானத்தைக் காக்க, கிருஷ்ணர் காஸ்ட்லி புடைவைக்குப் பதிலாக சிம்பிளாக வேட்டி சப்ளை செய்திருப்பார். அன்றிலிருந்து ஆண்களுக்கு வேட்டி கட்டும் வழக்கம் வந்திருக்கும்.

● **சரஸ்வதி, பெரம்பூர்**

***இன்றைய இளைஞர்களிடையே கலாசாரம் குறைந்து வருவதாகத் தோன்றுகிறதே கிரேஸி...?***

சமீபத்தில் 'மங்கையர் மலர்' பூஞ்சாரல் விழாவுக்குப் போயிருந்தேன். கல்லூரி மாணவ, மாணவிகளின் நாட்டிய, நாடக நிகழ்ச்சிகளைக் கண்டு அசந்தேன்! அசந்து போனதற்குக் காரணம், இன்றைய இளைஞர்களின் திறமை மட்டுமல்ல, நிகழ்ச்சிகளில் நான் கண்ட கலாசாரம்! பெரும்பான்மையான இளைஞர்கள் தாங்கள் போட்ட நாடகத்தின் மூலமாகச் சொல்ல விரும்பியது, 'அப்துல் கலாம்' அவர்களின் சீரிய சிந்தனைகளை. இன்றைய இளைஞர்களிடையே கலாசாரம் வரவேற்கத்தக்க 'அப்துல் - கலாசாரமாக' மாறி வருவதைக் காணும்போது, பாரதியாரின் கனவு மெய்ப்படும் என்பது ஊர்ஜிதமாயிற்று.

● **சிவசங்கர், மயிலாடுதுறை**

***இறைவன் தூக்கம் என்ற ஒன்றை நமக்கு அளிக்காமலிருந்தால் என்ன ஆகும்.***

கேள்விக்குப் பதில் தெரியாமல் கிரேஸி 'முழித்தான்' என்று யாரும் என்னைச் சொல்ல முடியாமல் போயிருக்கும். 'தூக்கம்' இருந்தால்தானே 'முழிப்பு'.

● **கே.மோகன சுந்தரம், பாளையங்கோட்டை**

***நடிகர் திலகத்துக்கு வசனம் எழுத முடியவில்லையே என்ற ஆதங்கம் உண்டா...?***

ஆதங்கம் உண்டா?, இல்லையா என்பதைத் தெரிந்துகொள்ளும் அளவுக்கு அவரோடு நான் நெருங்கிப் பழகியதில்லை. பல வசனங்களுக்கு உயிர் கொடுத்த அவருக்கு, நாம் வசனம் எழுதவில்லையே என்ற ஆதங்கம் இருந்திருக்க வாய்ப்பில்லை. ஓ... நீங்கள் என்னைக் கேட்கிறீர்களா...? இல்லாமல் இருக்குமா சார்... நடிகர் திலகத்துக்கு வசனம் எழுத முடியவில்லையே என்று ஆதங்கப்பட்டா

## கிரேஸியைக் கேளுங்கள்

தவன், எழுத்தாளனாகவே இருக்க முடியாது.

● சின்னசாமி, தேனி

*சாலை விதிகளை மீறி மாட்டிக்கொண்டதுண்டா...?*

இப்போது இருக்கும் ட்ராஃபிக் நெரிசலில், விதிகளை மீறும் அளவுக்குச் சாலையில் இடம் ஏது சார்... முன்னே பின்னே போக முடியாமல் நடுச் சாலையில் மாட்டிக்கொண்டு, தலைவிதியை நினைத்து நொந்து கொண்டதுண்டு...

● எஸ்.கே.வாலி, துறையூர்

*ராமாயணம், மஹாபாரதம் போன்ற இதிஹாஸ நாடகங்களைத் தாங்கள் போடலாமே...?*

எனக்குத் தெரிந்தது இதி'ஹாஸ்யம்' தான்!

● வி.வெங்கட்ராமன், செகந்திராபாத்

*ஆடிக் கறக்கற மாட்டை ஆடிக் கறக்கணும், பாடிக் கறக்கற மாட்டைப் பாடிக் கறக்கணும்... கிரேஸியிடம் எப்படிக் கறக்கணும்...?*

என்னிடம் கறக்க நினைப்பவர்களுக்கு நான் 'cheque'கு மாடு...!

● ஆர்.ராஜலட்சுமி, விழுப்புரம்

*'அகராதி பிடித்தவன்' என்கிறார்களே, அதற்கு என்ன அர்த்தம்..?*

எனக்குத் தெரியவில்லை. எதற்கும் dictionaryஐப் பார்த்துவிடுங்கள்...!

● சோமசுந்தரம், சென்னை

*பெண்களும் பூணூல் போட்டுக்கொண்டால்...?*

'தாவணி ஆவிட்டம்!'





# ஞாபகம்

அதிகாலையில எழுந்திருக்கணும்; கவனமாகப் படிக்கணும்; சாப்பாடு விஷயத்துல கரெக்டா இருக்கணும்; பரீட்சைக்குத் தேவையான பொருளை எல்லாம் ஞாபகமாக எடுத்து வைக்கணும்... என்று மாணவர்களுக்கு 'டிப்ஸ்' மழை பொழிந்துகொண்டிருக்கும் பரபரப்பான நேரம் இது!

எல்லா டிப்ஸ்களையும் மூளையின் ஏதோ ஒரு மூலையில் அவர்கள் ஏற்றி வைத்துக்கொண்டாலும், தேர்வு அறைக்குள் சென்றுவிட்டால் ஏதோ ஒரு பதற்றம் வந்துவிடத்தான் செய்கிறது. இதோ பதற்றம் நீக்கி, பரீட்சையில் அதிக மார்க் எடுத்து வெற்றிபெற எளிய ஆசனங்களை தருகிறார் முனைவர் பாஸ்கரன்.

• யோகேஸ்வரி

**பத்மாசனம்:**

கால்களை நேராக நீட்டி, தரையில் நிமிர்ந்து உட்காருங்க. முதல்ல வலது காலை மடக்கி, இடது தொடையின் மேல பாதம் அடிவயிற்றைத் தொடற அளவுக்கு வைச்சுக்கோங்க.

அடுத்து இடது காலை மடக்கி, வலது தொடை மேல பாதம் அடிவயிற்றைத் தொடற அளவுக்கு வைங்க. (மாணவிகள் முதல்ல இடது கால், அப்புறம் வலது கால் வைச்சு செய்யணும்).

பத்மாசனம் செய்யறதால மனம் விழிப்பு நிலையை அடையும்; அதனால் தெளிவும் புத்துணர்ச்சியும் உங்களுக்கு ஏற்பட்டு, தேர்வு அறையில் சுறுசுறுப்பா எழுதிக்கிட்டே இருப்பீங்க.



• பாஸ்கரன்

(இந்த ஆசனத்தை 2 முதல் 5 நிமிடம் செய்யணும்).

**சுகாசனம்:**

தரையில் உட்கார்ந்து சாப்பிடும்போது எப்படி இருப்போமோ, அதுதான் சுகாசனம்; ரொம்ப சுலபம் இது.

முதுகுத் தண்டை நேராக வைச்சு உட்காருங்க; ஆழ்ந்து சுவாசம் பண்ணுங்க; சின்முத்திரை (படத்தில் உள்ளவங்க கையைப் பாருங்க, அதுதான் சின் முத்திரை) வைச்சுக்கோங்க; உங்களோட நோக்கத்தை (தேர்வு நல்லா எழுதணும்னு) மனசுல நிறுத்துங்க. அவ்வளவுதான் இந்த ஆசனம்.

இதைப் பண்றதால, உங்களோட மனவலிமை அதிகரிக்கும்; மன ஒருமை ஏற்படும். (இந்த ஆசனத்தை பரீட்சைக்குக் கிளம்புவதற்கு முன் 2 முதல் 10 நிமிடம் செய்யணும்)



• லெனின்

# வருதே..!



**வஜ்ராசனம்:**

புகைப்படத்துல இருக்கற மாதிரி மண்டிபோட்டு உட்கார்ந்துக்கோங்க. உங்க முதுகுத்தண்டு நேராக இருக்க வேண்டியது ரொம்ப அவசியம். இந்த நிலையில அமைதியா தியானம் பண்ணலாம். இதைச் செய்வதால், வயிற்றுப்பகுதி இரத்த ஓட்டம் சீராகும்.

பொதுவா எல்லா பயிற்சிகளையும் தொடர்ந்து செய்யறது நல்லது. நீங்க தேர்வறைக்கு உள்ளே போனதும் இரண்டு நிமிஷம் அமைதியா இருங்க. உங்களோட மன அலைச் சுழல் நிதானமாகித் தெளிவடையும். அப்புறம் எழுத ஆரம்பிங்க. 'ஞாபகம் வருதே ஞாபகம் வருதே'ன்னு எழுதிக்கிட்டே இருப்பீங்க. உங்கள் வெற்றிக்கு மனப்பூர்வமான வாழ்த்துகள்!

செய்திச் சித்திரம்:

திரவியம் முருகன்



# படுத்துக்கொண்டே பார்க்கலாம்!

ஒரு பிரம்மாண்டமான சொகுசு இருக்கை. அதில் சௌகரியமாக உட்கார்ந்துகொண்டதும் வலது பக்கம் இருக்கும் ஒரு பட்டனை அழுத்தினால் போதும், இருக்கையின் தலைப்பகுதி அப்படியே பின்பக்கமாகச் சரிகிறது! கால்களை நீட்டி வைத்துக்கொள்ள சௌகரியமாக இருக்கையின் ஒரு பகுதி நீள்கிறது. உட்கார்ந்துகொண்டிருந்தவர், படுத்துக்கொண்டே பார்க்கலாம்! இந்த வசதி, சென்னை புரசைவாக்கத்தில் உள்ள அபிராமி தியேட்டரில்தான்!

''இது இந்தியாவின் முதல் ஐந்து நட்சத்திர தியேட்டர். அனைத்து பகுதிகளும் முழுமையாகக் குளிர்சாதன வசதி செய்யப்பட்டிருக்கிறது. இது ரசிகர்களை இன்னும் அதிக அளவில் தியேட்டர்களுக்கு இழுக்கும் என்பதில் சந்தேகமில்லை'' என்கிறார் அபிராமி ராமநாதன்.

''டெலிவிஷனில் மக்கள் மூழ்கிப் போகிறார்கள் என்பது உண்மைதான் என்றாலும், தியேட்டருக்குப் போய் சினிமா பார்க்கற அனுபவத்தையும் அவர்கள் இழக்கத் தயாராக இல்லை. அதனால்தான் மக்கள் மீண்டும் தியேட்டருக்கு சினிமா பார்க்க வருவது அதிகரித்திருக்கிறது. மேலும், சினிமா பார்ப்பது ஒரு பொழுதுபோக்கு. இனிமையான அனுபவம். இந்த எண்ணத்தை ஏற்படுத்துவதுதான் சினிமாவுக்கு ஒரு மறுமலர்ச்சியை ஏற்படுத்தியிருக்கிறது. மேற்கத்திய நாடுகளில் மக்கள் சினிமா பார்க்க வருவது குறைந்தபோது, அவர்கள் ஒரே வளாகத்தில் ஒரு பெரிய தியேட்டர் இருக்கும் இடத்தில், நாலைந்து சிறிய தியேட்டர்களைக் கட்டி 'மல்டி பிளக்ஸ்' கலாசாரத்தை உருவாக்கினார்கள். அதைத்தான் இப்போது நாம் செய்து கொண்டிருக்கிறோம்.

ஒரு பெரிய சினிமா தியேட்டரைப் பராமரிப்பதைவிட, ஒரு மல்டி பிளக்ஸில் உள்ள நாலைந்து சிறிய தியேட்டர்களைப் பராமரிப்பது எளிது; அதிக எண்ணிக்கையில் படங்களைத் திரையிட்டு, பலதரப்பட்ட ரசனை கொண்ட மக்களை, சினிமா பார்க்க தியேட்டருக்கு வரவழைக்க முடிகிறது. ஒரு சினிமாவுக்கு டிக்கெட் கிடைக்கவில்லை என்றால், வேறு ஒரு படத்துக்கு டிக்கெட் வாங்கிக்கொண்டு படம் பார்க்கற சௌகரியம் இருக்கிறது. நிர்வாகச் செலவும் கணிசமாகக் குறைகிறது. இப்படிப் பல அனுகூலங்கள் மல்டி பிளக்ஸ் அமைப்பில் இருக்கின்றன. எங்களின் அபிராமி மால் போன்றவை மல்டிபிளக்ஸ் என்பதையும் தாண்டி, சினிமா உள்ளிட்ட பல்வேறு பொழுது போக்கு அம்சங்களுடன், ஷாப்பிங், உணவகங்கள் என்று ஒட்டுமொத்த குடும்பத்துக்குமான பொழுதுபோக்கு மையமாக விளங்குகின்றன'' என்று கூறுகிறார் அபிராமி ராமநாதன்.



**- கௌதம் ராம்**

# தெரியுமா வாசகர்களே?



உங்களுக்கும் உங்களைச் சார்ந்த சிலருக்கும் மட்டும் தெரிந்த உங்கள் பிள்ளைகளின் திறமைகளை, புகைப்படத்துடன் ஊருக்கே சொல்லும் பகுதி...



# சாதனைத் தளிர்கள்!

பரிசும் உண்டு!





– விவரங்களுக்கு மார்ச் 2008 கோகுலம் வாங்கிப் பாருங்க!



உங்கள் பிள்ளைகளுக்கு மாதம்தோறும் 'கோகுலம்' தவறாமல் கிடைக்க சந்தா செலுத்துங்க!

தனிப்பிரதி ரூ.8/- | ஓர் ஆண்டு சந்தா ரூ.96/-

இப்போது கடைகளில் மார்ச் 2008

# கோகுலம்

சந்தாவை எம்.ஓ., டி.டி. அல்லது உள்ளூர் காசோலையாக அனுப்ப வேண்டிய முகவரி

சர்க்குலேஷன் மேனேஜர்,
கோகுலம் - தமிழ்
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032.



# தூறல் கவிதைகள்

உன் பாதங்கள்
நோக்கி ஓடிவரும் என்
சின்னஞ்சிறு நாய்க்குட்டிகளை
நடுத்தெருவில் விட்டுச்செல்லும்
மனமா உனக்கு?

-சிவகுமார்



## அஞ்சலி!

"வாசிக்கற வாசகனை, சிரமப்படுத்தாத எழுத்தின் நடையைக் கொண்டவர் ஸ்டெல்லா புரூஸ். அவரது எழுத்தில் யதார்த்தம் இருக்கும்; கவித்துவம் இருக்கும்; இளமை இருக்கும்; கற்பனையை அவசியமில்லாமல் அவர் அனுமதிப்பதில்லை. ஆரம்ப காலங்களில் எனக்கு, அவரது எழுத்தின் மீது தீராத மயக்கம் உண்டு. அவரே இப்போது மீளா மயக்கத்துக்குச் சென்றது வருத்தத்துக்குரிய நிகழ்வு."

- எழுத்தாளர்
பட்டுக்கோட்டை பிரபாகர்



யோசிக்காமல்
வார்த்தைகளைக் கொட்டிய
ஒரு வினாடிக்காக
பல மணிநேரம்
செலவழிகிறது
சமாதானம் பற்றி யோசித்தே

-மா.கண்ணன், இராஜபாளையம்



நெல்லு போட்டோம்
கம்பு போட்டோம்
சோளம் போட்டோம்
போட்ட பணம்
எடுக்கவில்லை
'பிளாட்' போட்டோம்
உடனடி விற்பனை!



விழாக்காலம்

# பங்குனியில் வரும் வசந்த நவராத்திரி!

**வ**சந்த காலம் என்று சொன்னாலே மனசுக்குள் ஒரு ரம்மியமான சித்திரம் எழுந்து நறுமணம் வீசும்!

மல்லிகை, முல்லை, செண்பகப், மாம்பூ, வேப்பம்பூ இவையெல்லாம் வசந்த காலத்தில் காற்றை நிறைக்க, ஆறு, குளம் குட்டைகளில் வெள்ளப்பெருக்கு அடங்கி, அவை தெளிந்த நீர் நிலைகளாக மாறிவிடுகின்றன. மிதமான, இதமான சூரிய ஒளி; அதில் புகுந்து வரும் தென்றல் காற்று. பறவைகளின் உற்சாகத் துக்கோ கேட்கவே வேண்டாம். 'காக்கைக் கும் குயிலுக்கும் உள்ள வித்யாசம், வசந்த காலம் வந்தால் தெரிந்துவிடும்' என்று ஒரு அழகான சமஸ்கிருதக் கவிதை தெரிவிக் கிறது. 'மாதங்களில் நான் மார்கழி, ருதுக் களில் நான் வசந்த ருது' என்று கீதையில் தன்னை அடையாளம் சொல்கிறான் கண்ணன்.

இப்படி பூமி எங்கும் புதுமெருகு பூசிவைக்கும் வசந்த காலத்தில், மன் மதனுக்கு ஓயாத வேலையாம்! வில்லை எடுத்தது எடுத்தபடி, நாண் ஏற்றியது ஏற்றியபடி, அம்பு எய்தது எய்தபடி!

மன்மதனுக்குரிய ஹோலிப் பண்டிகை, வசந்த காலத்தின் வருகையைப் பறை சாற்றுகிறது! சிவபெருமானின் நெற்றிக் கண்ணிலிருந்து கிளம்பிய நெருப்புக்கு இரையாகி சாம்பலாகிப்போன மன்மதன், அம்பிகையின் கருணையினால் மீண்டும் உயிர்த்தெழுந்து, தன் வேலையைத் தொடங்கிய நாள்தான் ஹோலிப் பண்டிகை.

**த**மிழ்நாட்டுக் கணக்குப்படி பங்குனி மாதம் தொடங்கி, சித்திரை மாதம் முடிய வசந்த காலம். இது சூரியனுடைய நிலையை ஒட்டி எழுந்த காலக் கணக்கு. சந்திரனுடைய நிலையை ஒட்டி எழுந்த காலக் கணக்கு சாந்திரமானம். அந்தக் கணக்குப்படி, நம்முடைய பங்குனிமாத அமாவாசைக்கு மறுநாள், சைத்ர மாதம் தொடங்கிவிடுகிறது. சைத்ர மாதம், அடுத்து வரும் வைசாக மாதம் இரண்டும் சாந்திரமான ரீதியாய் வசந்த காலம்.

இந்த இரண்டு மாதங்களிலும் தென் னாட்டுக் கோயில்கள் அனைத்தும் விழாக் கோலம் பூணுகின்றன. பங்குனி மாதம் உத்ஸவம் கொண்டாடாத கோயிலே இல்லை. கபாலீஸ்வரர், மருந்தீஸ்வரர் கோயில்கள் போன்று பல சிவாலயங்களில் பிரம்மோத்ஸவம் நடைபெறும். முருகனுக் குக் காவடி, அம்பிகைக்குப் பால்குடம், மாலவனுக்குத் திருக் கல்யாணம் என்று, எங்கு பார்த்தாலும் கோலாகலம்தான்!

இந்த வசந்த காலத்தில் வரும் நவராத்திரி மிகவும் விசேஷமானது. 'என்ன? நவராத்திரியா? அது - செப்டம்பர், அக்டோபர் மாதங்களில் அல்லவா வரும்!' என்பீர்கள். பொம்மைக் கொலு வைத்து, சுமங்கலிகளுக்கும் கன்யா பெண்களுக்கும் அழைப்பு விடுத்து, மஞ்சள், குங்குமம், சுண்டல், புட்டு, வெற்றிலை, பாக்கு, ரவிக்கைத் துணி, பிளாஸ்டிக் தட்டு, எவர்சில்வர் டப்பா என்று ஏக தடபுடலாய்க் கொண்டாடப்படுமே... அது சாரத நவராத்திரி. அம்பிகைக்கு உரிய நவராத்திரிகள் நான்கு. எல்லோருக்கும் தெரிந்த நவராத்திரிதான் புரட்டாசியில் வரும் சாரத நவராத்திரி. சரத் ருதுவில் வருவதால், அதற்கு சாரத நவராத்திரி என்று பெயர். பங்குனி மாத அமாவாசைக்கு மறுநாள் பிரதமை தொடங்கி, நவமி வரை உள்ள ஒன்பது நாட்களும் வசந்த நவராத்திரியாக தேவி உபாஸகர்களால் கொண்டாடப்படுகிறது. சாரத நவராத்திரி ஸ்ரீலலிதாம்பிகைக்கு உரியது. வசந்த நவராத்திரி ஸ்ரீ பால திரிபுர சுந்தரிக்கு உரியது.

சாரத நவராத்திரியில் சுவாஸினி (சுமங்கலி) பூஜை விசேஷம் என்றால், வசந்த நவராத்திரியில் கன்யா பூஜை செய்வது விசேஷம். பத்து வயதுக்குட்பட்ட சிறுமிகளை பால திரிபுரசுந்தரியாகப் பாவித்து, அவர்களுக்குப் புத்தாடைகள், சௌபாக்ய திரவியங்கள், அலங்கார திரவியங்கள் சமர்ப்பித்து, பூஜை செய்வது வழக்கம். இந்த வசந்த நவராத்திரி ஸ்ரீ ராம நவமியன்று நிறைவு எய்தும்.

சாரத நவராத்திரியில் வரும் விஜயதசமி போன்று வசந்த நவராத்திரியில் இல்லை. ஸ்ரீ கிருஷ்ணர் அவதரித்த அன்று, கூடவே யோகமாயையாக அம்பிகை அவதரித்தாள். ஸ்ரீ ராமநவமியன்று அம்பிகையே ஸ்ரீ ராமனாக அவதரித்ததாக ஒரு கருத்து உண்டு. மகாவிஷ்ணுவின் பத்து அவதாரங்களுமே அம்பிகையின் பத்து கைவிரல் நகங்களில் இருந்து உண்டானதாக லலிதா சகஸ்ர நாமம் பேசுவதால், இராமாவதாரமும் அம்பிகையின் அவதாரமே என்று கொள்வதில் தவறில்லை. காஞ்சி மஹாஸ்வாமிகளும் அம்பிகையே ஸ்ரீராமனாக அவதரித்ததாக அருளியிருக்கிறார்கள். ஆக, பாரத தேசம் முழுவதும் விமரிசையாகக் கொண்டாடப்படும் ஸ்ரீ ராம நவமி உத்ஸவமும் வசந்த நவராத்திரி உத்ஸவமே!

**– த.கி. நீலகண்டன்**



**அம்பிகைக்கு உரிய நவராத்திரிகள் நான்கு. எல்லோருக்கும் தெரிந்த நவராத்திரிதான் புரட்டாசியில் வரும் சாரதா நவராத்திரி. சாரதா நவராத்திரி ஸ்ரீலலிதாம்பிகைக்கு உரியது. வசந்த நவராத்திரி ஸ்ரீபால திரிபுர சுந்தரிக்கு உரியது.**

Registered with the Registrar of Newspaper of India under No.1041/57 Registered No.TN/CC(S)DN/144/06-08 Licensed to post without prepayment under PMG's Licence No.WPP TN/CC(S)DN/70/06-08 Registered as a Newspaper in Srilanka.